

பழநி அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயிலுக்கு மாண்புமிகு தமிழக முதல்வர் திருமிகு ஓ. பன்னீர்செல்வம் அவர்களும், மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர் திருமிகு பி.சி. ராமசாமி அவர்களும் வருகை தந்து திருக்கோயில் தூய்மைப்படுத்தும் பணியைத் துவக்கி வைத்தார்கள். தமிழக அரசின் அறநிலையத் துறைச் செயலாளர் திருமிகு பி.ஏ. ராமையா இ.ஆ.ப. அவர்களும், இந்துசமய அறநிலையத்துறை சிறப்பு ஆணையாளர் மற்றும் ஆணையாளர் திருமிகு த.ரா. சீனிவாசன் இ.ஆ.ப. அவர்களும், திருக்கோயில் இணை ஆணையர் / நிர்வாக அதிகாரி திரு கே.கே. இராஜா அவர்களும் உடன் உள்ளார்கள்.

# திருக்கோயில்

திங்கள் இதழ்



| | | |
|---|---|---|
| தனி இதழ் | : | ரூ. 5.00 |
| ஆண்டு உறுப்பினர் கட்டணம் | : | ரூ. 60.00 |
| ஆயுள் உறுப்பினர் கட்டணம் | : | ரூ. 500.00 |

| | | | |
|---|---|---|---|
| மாலை 43 | திருவள்ளுவர் ஆண்டு 2032 | விசு - கார்த்திகை நவம்பர் 2001 | மணி 11 |




முகப்பு

பழநி அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி

## பொருளடக்கம்




உறுப்பினர் கட்டணம் அனுப்ப வேண்டிய முகவரி :

உயர்திரு ஆணையாளர் அவர்கள்
**திருக்கோயில்**
இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை
119, உத்தமர் காந்தி சாலை, சென்னை - 600 034.
தொலைபேசி : 8279407

# சிவபோகசாரம்

- முனைவர் த. அமிர்தலிங்கம்

நான் எவ்வளவு பெரியவன்? என் பதவி எப்படிப்பட்டது? என்னிடம் உள்ள பணம் வேறு யாரிடம் உள்ளது? எனக்கு ஈடு ஆவாரா பிறர்? என எவரும் தற்பெருமையில் மிதத்தல் கூடாது;

எனக்கு இப்பதவி கிட்டியதும், எனக்கு இவ்வாறான செல்வங்கள் கிட்டியதும், எனக்கு இவ்வாறாகப் பெருமைகள் சேர்ந்ததும் எல்லாம் இறைவன் அருளாலே என்று தன்னை ஒரு பொருட்டாக மதிக்காமல் எல்லாம் ''இறையருள்'' என்பதாக உணர்ந்து கூறித் திளைத்தல் வேண்டும்.

மின்னலென ஒரு நொடி நேரம் மிளிர்ந்து மறு நொடியில் மறைந்து போய்விடக் கூடிய நிலையையுடைய நிலவுலக வாழ்க்கையை விட்டுப் போவதற்கு எந்நேரமும் தயாராக இருத்தல் வேண்டும்.

அழுக்கு உடம்பை - ''சுக்கிலமும் நீருஞ் சொரி மலமும் நாறும் உடல்'' எனும் தன்மையை உணர்ந்து நீர்க்குமிழிபோல் மறைந்து அழியும் இவ்வுடலையா நிதமும் சதமென்று ''பொய்வேட மிருதி கூட்டிப்'' பார்த்துள்ளேன் எனத் தினமும் பழித்து, உடல் பற்றை நீங்குதல் வேண்டும்.

அங்கிங்கு எனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்தப் பூர்த்தியாகி, உயிர்க்கு உயிராய்த் தழைத்து நிற்கும் சிவமாகிய பரம்பொருளிடம் உள்ளத்தைச் செலுத்த வேண்டும்.

இவ்வாறாகப் பழகிப் பண்பட்ட வாழ்க்கை வாழ முற்படுவோம் ஆனால் துன்பத்திற்குக் காரணமான பிறப்பை ஒழித்து விடலாம்.

இதனை நமக்கு நன்கு உணர்த்தும் ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாச்சாரிய சுவாமிகளின் ''சிவபோக சாரம்'' பாடல் பின்வருமாறு:

''தன்பெருமை எண்ணாமை தற்போதமே இறத்தல்
மின்பெருமை யாஞ்சகத்தை வேண்டாமை - தன்பால்
உடலைத் தினம்பழித்தல் ஓங்குசிவத் தொன்றல்
நடலைப் பிறப்பொழியும் நாள்''.

### கற்பது எதற்காக?

கல்வி கற்பது எளிதான காரியம் அன்று. மிகவும் கடின்மான காரியம். அவ்வாறு மிகவும் கஷ்டப்பட்டுப் பயில்வது என்ன பயன் கருதியோ?



நான் சொல்வதேசரி, உனக்கென்ன தெரியும்? நீ வாயை மூடு, நீ முதலில் உன் வாயை மூடு என்றெல்லாம் நாய்களைப் போல் ''வள்வள்'' என ஒருவர், மற்றொருவர்மேல் சீறி விழுந்து வாதங்கள் புரிவதற்காகவா கல்வியைக் கற்றுக் கொள்கின்றோம்? நற்கருணை வெள்ளமாகத் திகழும் - கங்கை வெள்ளத்தைத் தம் திருச் சடையில் தாங்கி விளங்கும், விரி சடைக் கடவுள்பால் உள்ளம் செலுத்தவும், உள்ளம் ஒடுங்கி உயர்வுடைய தெய்வ நெறியில் வாழ்வதுமே கல்வி கற்றலின் பயன் ஆகும்.

இதை நமக்கு நன்கு உணர்த்தும் ஸ்ரீலஸ்ரீ குருஞான சம்பந்த தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் பாடியருளியுள்ள ''சிவபோக சாரம்'' நூலில் வரும் வெண்பாப் பாடல் பின்வருமாறு :

''கற்க இடர்ப் பட்டுமிகக் கற்ற எல்லாம்
கற்றவர்பால்
தற்கமிட்டு நாய்போலச் சள்ளெனவோ -
நற்கருணை
வெள்ளம் அடங்கும்விரி சடையார்க்கு ஆளாகி
உள்ளம் அடங்கஅல்ல வோ?''

# காஞ்சித்தல மகிமை

- டாக்டர் சிவப்பிரியா, டெல்லி

காஞ்சிபுரம் என்றால் மாமரத்துப் பரம்பொருள் ஏகாம்பரேசுவரர் கோயில் முதலான எண்ணற்ற கோயில்களும் பட்டுச்சேலைகளும் நினைவிற்கு வருகின்றன. ஆனால் இவை மட்டுமன்றி எத்தனையோ அதிசயங்களும் அற்புதங்களும் விந்தைகளும் நிறைந்த அருமைத் திருத்தலமாக காஞ்சிபுரம் விளங்கியது. சுந்தரர் போற்றிய அறுபத்து மூன்று அருளாளர்களில் திருக்குறிப்புத் தொண்டர் பிறந்த காஞ்சிபுரத்தைப் பற்றிக் கூறும்போது சேக்கிழார் பெருமான் இத்தலத்தின் சிறப்புகள், அருமை பெருமைகள் அத்தனையும் மிக அழகாக விளக்கமாக விவரித்துள்ளார். தொட்டால் பொன்னாக்கும் சிலை, தான் யார் கண்ணுக்குப் புலப்படாமல் இருந்து எல்லோரையும் பார்க்கக் கூடிய அதிசய மண்டபம், தீயவற்றையெல்லாம் நல்வினையாக்கும் அற்புதப் பொய்கை என சுவை மிக்க எத்தனையோ செய்திகள் உள்ளன. அவற்றைச் சென்று காண்போமாக!

கயிலைமலையில் அன்னை பராசக்திக்கு ஆகமங்களை அறியவேண்டும் என்ற ஆவல் உண்டாயிற்று. வழக்கம் போல் ஆத்மலிங்கத்தைப் பூஜை செய்த பராசக்தி ஆகமங்களை அறிவிக்க வேண்டும் என்று பரம்பொருளை வேண்டினார். அங்கங்கள் இல்லாத லிங்க வடிவமாகிப் பராசக்தியின் பிரார்த்தனையை ஏற்ற உருவம் இல்லாத சிவப்பரம்பொருள், ஐந்து நிறங்கள் கொண்ட ஐந்து முகங்களும் பத்து தோள்களும் உடைய குரு வடிவத்துடன் வெளிப்பட்டு அருளினார். தேவி பராசக்தி ஐம்முகப் பரமசிவனைப் பணிந்து ஆகமங்களையெல்லாம் உபதேசித்தருள வேண்டினார். பரமசிவன் பராசக்திக்கு ஆகம விதிமுறைகளையெல்லாம் உபதேசித்தருளினார். சிவப்பரம்பொருள் பராசக்திக்கு ஆகமங்களை ஓதியருளியதை

ஆகமம் சொல்லும் தன் பாங்கிக்கே

என்று பரம்பொருளை நேரில் கண்ட தெய்வத் திருநாவுக்கரசர் போற்றுகின்றார். அஞ்சு முகங்களால் ஓதியருளியதால் பரமனுக்கு முகஞ்சோதரர் என்ற திருப்பெயர் ஏற்பட்டது. முகஞ்சோதரர் எழுந்தருளிய திருத்தலம் முகஞ்சோதரம் எனப்பட்டது. இத்தலம் இப்போது அழிந்து பட்ட ந கரமாகவுள்ளது.

ஆகமங்களை உணர்ந்து கொண்ட பராசக்தி ஆகமவிதி முறைப்படி சிவப்பரம்பொருளைப் பூசை செய்ய விரும்பினார். பராசக்தியின் உள்ளம் அறிந்த பரமேசுவரன் சக்தியை நோக்கி தென்திசையில் உள்ள காஞ்சி மாநகரம் என்னும் தலத்தில் நாம் குடிகொண்டுள்ள புண்ணிய மாமரத்து நிழலில் நம்மைப் பூசை செய்வாயாக என்று அருளிச்செய்தார். மாமரத்தில் எழுந்தருளியுள்ளதால் பரம்பொருளுக்கு ஏகமாம்பரேசுவரர் என்று பெயர். (ஏக + ஆம் + பர + ஈசுவரர்)

பராசக்தி கயிலைமலையை நீங்கி காஞ்சிபுரத்தை அடைந்தாள். சிவப்பரம்பொருளின் புனித மாமரம் பராசக்தியின் கண்களுக்குப் புலனாகவில்லை. காஞ்சி நகரமெங்கும் அலைந்து திரிந்தும் மாமரம் கண்ணில் படாததால் ஏகாம்பரேசுவரரின் திருக்காட்சி பெறுவதற்காகத் தவம் இயற்றினாள். மாமரத்துச் சிவக்கொழுந்தைக் காண வேண்டும் என்ற விருப்பம் உடையவளாய்த் தவம் செய்ததால் பராசக்திக்குக் காமாட்சி என்ற பெயர் உண்டாயிற்று. தவத்திற்குப் பலனாகப் பரமசிவன் மாமரத்திலிருந்து காட்சி தந்தார். இறைவன் திருக்காட்சி தந்து மறைந்த புனித மாமரத்து நிழலில் பராசக்தி பூசை செய்யத் தொடங்கினாள். காஞ்சி மாநகரில் பாயும் கம்பையாற்றங்கரையில் சென்று நீராடி ஓம் நமசிவாய என்ற மகாமந்திரத்தை உச்சரித்து நெற்றியில் திருநீறு இட்டுக்கொண்ட பின் ஆகம விதிப்படி பூசை செய்வதற்கான பூசைப் பொருட்களையெல்லாம் சேகரித்து புதிய மலர்களாகப் பறித்து வந்தாள். மாமரத்தடியில் மண்ணால் லிங்கம் பிடித்து வைத்து அபிஷேகம், ஆராதனை செய்து மந்திரம் ஓதி முத்திரை காட்டி வலம் வந்து ஆகம நெறியால் விதி மாறாமல் அர்ச்சனை செய்து வழிபட்டாள். பல நாள் இவ்வாறு நியமம் தவறாமல் பராசக்தி சிவபூசை செய்து வந்தாள். காமாட்சி அம்மனின் பக்தியை சோதிப்பதற்காக சிவபரம்பொருள் கம்பை நதியில் வெள்ளத்தை உண்டாக்கினார். கரைகடந்து பாய்ந்து வரும் ஆற்றுவெள்ளத்தைக் கண்ட காமாட்சியம்மன் பயந்து எழுந்து ஓடிச்சென்று லிங்கத்தை இறுக்கமாகக் கட்டிப் பிடித்துக் கொண்டாள். காமாட்சியின் பக்தியை மெச்சிய பரமன் லிங்கத்திலிருந்து வெளிப்பட்டுக் காட்சி தந்தார்.

''எள்கல் இன்றி இமையவர் கோனை ஈசனை
வழிபாடு செய்வாள் போல் உள்ளத்து உள்கி
உகந்து



உமை நங்கை வழிபடச் சென்று நின்றவா கண்டு
வெள்ளம் காட்டி வெருட்டிட அஞ்சி வெருவி ஓடித்
தழுவ வெளிப்பட்ட கள்ளக் கம்பனை எங்கள்
பிரானைக்
காணக் கண் அடியேன் பெற்றவாறே''

என்று நாளும் வழிபட்ட காமாட்சி அம்மனுக்கு காட்சி கொடுத்த கருணையோடு தனக்குக் கண் கொடுத்த மாபெரும் திருவருளையும் சுந்தரர் போற்றி மகிழ்கின்றார்.

காமாட்சியம்மன் கட்டிப்பிடித்துக் கொண்டதால் மேனியில் பதிந்த அம்மையின் அங்க அடையாளங்களுடன் திருக்காட்சி தந்த பரமேசுவரன் வேண்டிய வரங்களையெல்லாம் கேட்குமாறு அருளிச் செய்தார். வெள்ளம் காரணமாக சிவபூசை முற்றுப்பெறாமல் போனதை நினைத்த பராசக்தி இறைவனிடம் என்றென்றும் குறைவுபடாத சிவபூஜை செய்ய வேண்டும் என்று வேண்டினாள். மேலும் காஞ்சி நகரில் சிவப்பரம்பொருளை உள்ளத்தில் நிறுத்தி மெய்நெறிக்கண் செல்லும் சிவனடியார்கள் செய்யும் செயல் எதுவாயினும் அதைத் தவமாக்கியருள வேண்டும் என்று வேண்டினாள். பின்னும் நான் காசியில் அன்னபூரணியாக அன்னதானம் மட்டுமே செய்கின்றேன். இங்கு காஞ்சிபுரத்தில் எல்லாவிதமான முப்பத்திரண்டு அறங்களையும் நான் செய்வதற்கு வகை செய்ய வேண்டும் என்று மூன்று வரங்களைக் கேட்டாள். வேண்டுவார் வேண்டுவதே வழங்கும் பரமசிவன் பராசக்தி கேட்ட வரங்களையெல்லாம் அருளிச்செய்து மறைந்தார்.

காமாட்சியம்மன் மண்ணால் லிங்கம் பிடித்து வைத்து வழிபட்ட இடமே ஏகாம்பரேசுவரர் திருக்கோயில். இத்திருக்கோயிலின் தலமரமான புனித மாமரம் மற்ற எல்லா மாமரங்களிலிருந்தும் வேறுபட்ட விந்தையான மரமாக விளங்குகின்றது. தற்போது உள்ள புனிதத் தலமரத்தின் வயது ஐயாயிரம் ஆண்டுகள். மற்ற மாமரங்களைப் போல அல்லாமல் இப்புனித மரமானது அடிப்பகுதியிலிருந்தே நான்கு தண்டுகளாக நான்கு திசைகளிலும் வளர்ந்துள்ளது. நான்கு தண்டுகளின் கிளைகளிலிருந்தும் தோன்றும் கனிகள் நான்கு வேறுபட்ட சுவையுடன் உள்ளன.

சிவ பரம்பொருள் மண்ணாக விளங்குவதால் காஞ்சிபுரம் ஐம்பூதத் தலங்களில் மண் தலமாக, பிருத்வித் தலமாகத் திகழ்கின்றது. காஞ்சிபுரத்தில் மண்ணாக வெளிப்பட்ட சிவபரம்பொருள் திருவண்ணாமலையில் நெருப்பாகவும், திருவானைக்காவில் வானமாகவும் விளங்குகின்றான். அமரநாதத்தில் பனியாகவும், தென்திருமுல்லைவாயிலில் பாதரசமாகவும், திருப்பாச்சூரில் மூங்கில் மரமாகவும் காட்சி தருகின்றான். இவ்வாறு எல்லாமாகத் தோன்றிக் காட்சி தரும் சிவபரம்பொருளை

''எல்லாம் சிவன் என்ன நின்றாய் போற்றி''

என்று திருநாவுக்கரசர் வாழ்த்துகின்றார். காஞ்சிபுரத்தில்

மண்ணால் எழுந்தருளியிருக்கும் பரமசிவம் காமாட்சி யம்மனின் வேண்டுகோளுக்கு ஏற்ப காஞ்சிபுரத் தில் மட்டுமன்றி எந்தத் தலமாயினும் சித்தம் சிவ மாக்கி அன்பர் செயல் எல்லாவற்றையும் தவமாக்கி அருள்வதை

சித்தம் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும் அத்தன்

என்று நந்திதேவரின் அவதாரமான மாணிக்கவாசகர் எடுத்துரைக்கின்றார். கண்ணப்பர், சண்டீசர் ஆகியோ ரின் வரலாறுகள் எல்லாவற்றையும் தவமாக்கி சிவப் பரம்பொருள் புரிந்த மாப்பெருங்கருணையின் உண்மை யைக் காலந்தோறும் எடுத்துரைக்கின்றன.

காஞ்சிபுரத்தில் காமாட்சியம்மன் செய்த சிவ பூசை முற்றுப்பெறாத காரணத்தாலேயே ஏகாம்பரேசு வரர் திருக்கோயிலில் காமாட்சியம்மனுக்குச் சந்நிதி இல்லை. மயிலாப்பூரில் பராசக்தி மயிலாக வந்து சிவ பூஜை செய்ததால் கபாலீசுவரர் கோயிலில் கற்பகாம் பாள் சந்நிதி உள்ளது. மதுரையில் சொக்கநாதரைப் பூஜை செய்ததால் மீனாட்சிக்கு சுந்தரேசுவரர் கோயிலில் சந்நிதி உள்ளது. இவ்வாறு பலப்பல தலங் களிலும் சிவபூஜையின் பலனாகப் பராசக்திக்கு சந்நிதி உள்ளது. ஆனால் காஞ்சிபுரத்தில் சிவபூஜை தடை பட்ட காரணத்தால் ஏகாம்பரேசுவரர் கோயிலில் காமாட்சியம்மனுக்கு சந்நிதி இல்லை. காமாட்சி யம்மன் தங்கியிருந்து முப்பத்திரண்டு அறங்களையும் புரிந்து வந்த இடமே காமக்கோட்டம் என்ற காமாட்சி யம்மன் கோயிலாக உள்ளது. பராசக்திக்கு வரம் அருளி அறங்களை வாழ்வித்ததால் பரமசிவனுக்கு அறவாழி அந்தணன் என்று பெயர்.

தையலாள் உலகு உய்ய வைத்த காரிரும் பொழில்
கச்சி மூதூர்க் காமக் கோட்டம் உண்டாக

என்று கச்சியேகம்பனால் கண் பார்வை பெற்ற சுந்தரர் போற்றுகின்றார். ''அறவாழி அந்தணன் ஆதிப்பரா பரன்'' என்று திருமூலர் கூறுகின்றார்.

பாற்கடல் கடையப்பட்ட காலத்தில் மேரு மலையைத் தாங்குவதற்காக ஆமையான விஷ்ணு சிவபூசை செய்து வரம் பெற்ற காரணத்தால் காஞ்சி நகருக்குக் கச்சிநகரம் என்று பெயர் உண்டானது. கச்சு என்றால் ஆமை என்று பொருள். ஆமையாகி மலையைத் தாங்கிக் கடலில் நிறுத்திய பின்னர் ஆணவ மிகுதியினால் ஆமையானது கடலையெல்லாம் கலக்கி அட்டகாசம் புரியத் தொடங்கியது. தேவர்கள் கலங்கி சிவபரம்பொருளைத் துதி செய்து ஆமையி லிருந்து மகாவிஷ்ணுவை வெளிப்படுத்தியருளுமாறு வேண்டினர். சிவப்பரம்பொருள் ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்ட வடிவத்துடன் தோன்றி ஆமை யைப் பிளந்து அதன் ஓட்டினை மார்பில் அணிந்து கொண்டு விஷ்ணுவை வெளிப்படுத்தியருளினார். ஆமையுடல் அழிந்து மீண்டும் மகாவிஷ்ணுவாக மாறிய பின் விஷ்ணு காஞ்சிபுரத்தில் லிங்கம் உரு வாக்கி வைத்து சிவபூஜை செய்து தன் நன்றியைத் தெரி வித்தார். ஆமையிலிருந்து விஷ்ணுவை வெளிப்படுத்தி மீண்டும் வைகுண்ட வாழ்வை வழங்கியதால் சிவ பரம்பொருளுக்குக் கச்சபேசுவரர் என்று பெயர். கச்சு வான திருமால் சிவபூஜை புரிந்த இடமே கச்சபேஸ் வரர் திருக்கோயில். காஞ்சிபுரத்தில் சிவ பூஜை செய்த பின்னர் சிங்கப்பெருமாள் கோயில் அருகிலும் விஷ்ணு சிவபூஜை செய்து விட்டு வைகுண்டம் சென்றார். இந்தத் திருத்தலமும் கோயிலும் கச்சூர் ஆலக்கோயில் எனப்படுகின்றன. காஞ்சிபுரத்தில் அன்னை காமாட்சியம்மன் திருக்கோயிலுக்கு அருகே கச்சபேஸ்வரர் திருக்கோயில் உள்ளது. விஷ்ணு பன்றி யாக, அதாவது வராகமாகிப் பூமியைத் தாங்கிய பின் எல்லோரையும் தாக்கி அழித்தபோது தேவர்கள் மற்றும் தெய்வங்களின் பிரார்த்தனையினால் சிவப்பரம் பொருள் பன்றியைக் கிழித்து அதன் பல்லை (கொம்பு) மார்பில் அணிந்து கொண்டு மகாவிஷ்ணுவை வெளிப் படுத்தியருளினார். பன்றியிலிருந்து விடுபட்ட விஷ்ணு சிவபுரம் என்ற தலத்தில் சிவபூஜை செய்து விட்டு வைகுண்டம் சென்றார். இவ்வாறு சிவப்பரம் பொருள் ஆமை ஓடும், பன்றிக்கொம்பும் அணிந்து விஷ்ணுவிற்கு மீண்டும் வைகுண்ட வாழ்வை வழங்கிய கோலத்தை

''அழகு ஆமை அணிகேழற்கொம்பு ஆர்த்த
தோடு அரவத்து ஒரு காதன்''
''என்பொடு கொம்பொடு ஆமை இவை மார்பு
இலங்க எருது ஏறி''

என்று அர்த்தநாரீசனது அருட்பாலுண்டு தமிழிசை வளர்த்த தெய்வீகத் திருஞானசம்பந்தர் போற்று கின்றார். சிவ பூஜை புரிந்து வரம்பெற்ற காமாட்சி யம்மனுக்குக் காஞ்சிபுரத்தில் கோயில் அமைந்தது போல் சிவபூஜை செய்து வாழ்வு பெற்ற விஷ்ணு விற்கும் கச்சி மாநகரில் கோயில்கள் அமைக்கப் பட்டன.

கச்சி ஏகாம்பரேசுவரர் மாணிக்கவாசகருக்கு முப்புரம் எரித்த வில்லாளியாக ஒற்றை அம்புடன் காட்சி தந்ததால் ஏகம்பர் என்னும் திருப்பெயர் பெற்றார். திருப்பெருந்துறையில் தட்சிணாமூர்த்தி வடிவைக் காட்டி ஓங்காரம் உபதேசித்து மாணிக்க வாசகரை வலிந்து ஆட்கொண்ட பரமசிவம் அவருக்கு அருளிச்செய்ததற்கு ஏற்ப தலந்தோறும் திருக்காட்சி தந்தருளினார். மாணிக்கவாசகர் காஞ்சிபுரம் வந்து

தொழுதபோது புரமெரித்த வில்லாளியாக ஒற்றை அம்புடன் காட்சி கொடுத்தார். புரமெரித்த காலத்தில் பரமசிவம் இமயமலையை வில்லாக வளைத்த போது மகாவிஷ்ணு அம்பாகிப் பணிபுரிந்தார். ஆனால் சிவப்பரம்பொருளோ எந்த ஆயுதமும் இல்லாமல் புன்னகையாலேயே புரம் எரித்து மூன்று அசுரர்களுக்கும் முக்தி வழங்கி சிவபதம் அருளினார். இவ்வாறு கையில் இருந்த ஒரே அம்பும் அதிகமாக, மிகையாக இருந்ததால் புரம் எரித்த தலத்திற்கு திருவதிகை என்று பெயர் உண்டாயிற்று. மதுரையில் கொற்றாளாகவும், வேடுவனாகவும், போர்ச்சேவகனாகவும், பரிமேல் அழகனாகவும் வந்தருளி மாணிக்க வாசகருக்குக் காட்சி தந்த சிவப்பரம்பொருள் காஞ்சிபுரத்தில் ஒற்றை அம்புடன் கூடிய வில்லாளியாகத் திருக்காட்சி தந்தார். இவ்வாறு ஏகாம்பரேசுவரர் ஏகம்பராக (ஏக + அம்பர்) காட்சி கொடுத்த மாப்பெருங் கருணையை

உய்ய வல்லார் ஒரு மூவரைக் காவல்கொண்டு
எய்யவல்லார்
ஈரம்பு கண்டிலம் ஏகம்பர்
தன்கையில் ஓரம்பே முப்புரம் உந்தீபற
ஒன்றும் பெருமிகை உந்தீபற

என்று ஓங்கார வாசகர் பாடியருளினார். ஒற்றை அம்பு உடையவராகக் காட்சி கொடுத்த பரமசிவம் ஆண்பாதி பெண்பாதியான இருபால் வடிவத்துடன் மறைந்தருளினார். ஆண்பால், பெண்பால், இருபால் என மூவகை இனங்களுக்கும் மூலகாரணமான சிவபரம் பொருளின் அற்புத இருபால் வடிவத்தை

ஏகம்பத்து உறை எந்தாய் போற்றி
பாகம் பெண்ணுரு ஆனாய் போற்றி

என்று பரமனே வலிய வந்து விரும்பி ஆட்கொண்டு அருளிய மாணிக்கவாசகர் போற்றுகின்றார். தெய்வங்கள் முதலாகத் தாவரங்கள் வரையுள்ள மூவகை இனங்களின் தோற்றத்திற்குக் காரணமான அற்புதமான இருபால் வடிவத்தைக் காணும் பேறு பெற்றவர்கள் மாணிக்கவாசகரும் திருஞானசம்பந்தரும் மட்டுமே. மூன்றாண்டு மழலையாக இருந்த திருஞானசம்பந்தர் சீர்காழிக் கோயில் குளக்கரையில் தந்தையைக் காணாது அப்பா அம்மா என்று அழுதபோது சிவப்பரம்பொருள் தோடுடைய செவியனாக, இருபாலனாக, அம்மையப்பனாகக் காட்சி தந்து தங்கக் கிண்ணத்தில் உணவு அளித்துச் சென்றார்.

''தோடுடைய செவியன் விடையேறி''
''பொற்கிண்ணத்து அடிசில் பொல்லாது எனத்
தாதையார் முனிவுறத் தான் எனை ஆண்டவன்''

என்று இந்த அரிய காட்சியைத் திருஞானசம்பந்தர் பாடுகின்றார்.

காஞ்சிபுரத்தில் தெய்வங்கள், தேவர்கள், விஞ்சையர், இயக்கர், காந்தருவர் போன்ற வானலோக வாசிகளும் முனிவர்கள், சித்தர்கள், யோகியர், அருளாளர்கள் மற்றும் பலவகைப்பட்ட உயிரினங்களும் வந்து ஏகாம்பரேசுவரரை வழிபட்டு சிவப்பரம்பொருளிடம் வரம்பெற்றதால் எண்ணற்ற சிவத்தலங்களும், காமாட்சியம்மன், விஷ்ணு, முருகன் ஆகிய தெய்வங்களின் கோயில்களும் மகிமை நிறைந்த புண்ணிய தீர்த்தங்களும், அதிசயங்களும் அற்புதங்களும் உள்ள மண்டபங்களும், சோலைகளும் வெளிகளும் காணப்படுகின்றன.

காமாட்சியம்மன் நீராடி ஏகாம்பரேசுவரரது அபிஷேகத்திற்காகப் பயன்படுத்திய கம்பையாறு, மற்றும் காஞ்சியாறு என கங்கையை விடச் சிறந்த பல நதிகள் காஞ்சிபுரத்தில் பாய்கின்றன.

காஞ்சியில் பிரம்மன், விஷ்ணு, ருத்திரன் ஆகிய மும்மூர்த்திகளும் சிவப்பரம்பொருளை வழிபடுவதற்காக ஒரு நாளுக்கு மூன்று மலர்கள் மட்டுமே மலரும் தாமரைக்குளம் ஒன்று உள்ளது. இந்த மும்மூர்த்திகளும் கச்சிக்கம்பனை வழிபட்டுத் தங்குகின்ற ருத்திர சோலை என்ற பூஞ்சோலை உள்ளது. மூவரும் சோலையிலுள்ள வில்வ மரத்திலிருந்து வில்வ இலைகளைப் பறித்து ஏகாம்பரேசுவரருக்கு அர்ச்சனை செய்து வந்தனர். மூவரையும் குறிக்கும் வகையிலேயே வில்வமானது சிவ பரம்பொருளுக்கு ஒற்றை இலையாக இல்லாமல் மூன்று மூன்று இலைகளாக உண்டாகி அர்ச்சனை செய்யப்படுகின்றது.

காஞ்சிபுரத்தில் செண்டணை வெளி என்ற இடம் உள்ளது. இங்கு சித்தர்கள், யோகியர், காந்தர்வர், இயக்கர் எல்லாம் பரமசிவத்தை வழிபடுவதற்காகப் பூச்செண்டுகளைக் கொண்டு வருவர்.

காஞ்சிபுரத்து அதிசயங்களில் ஒன்று அங்கிருந்த நந்திவாகனரின் தங்கச்சிலை. வழிபடுவோர்களது பிறவியை நீக்கி முக்தி வழங்கும் இச்சிலையினை வணங்கி சிவப்பரம்பொருளை உணர்ந்து மெய்நெறியில் செல்லும் சிவபக்தர்கள் தொட்டால் அவர்களது கையில் இருக்கும் பொருள் எதுவாயினும் அதுவும் தங்கமாக மாறிவிடுகின்றது. இதனாலேயே இத்திருத்தலத்திற்குக் காஞ்சிபுரம் அதாவது பொன்னகரம் என்ற பெயர் அமைந்தது.

காஞ்சித் திருத்தலத்தில் புண்ணிய தீர்த்தம் என்று ஒரு குளம் உள்ளது. இதில் மூழ்கி எழுபவர் களின் தீமைகள் எல்லாம் நன்மைகளாக மாறுகின்றன. மற்றொரு புனிதத் தீர்த்தம் இஷ்டசித்தி தீர்த்தம் என்பது. இப்பொய்கையில் சிவப்பரம்பொருளை நினைத்து நீராடுபவர்களின் விருப்பங்கள் யாவும் நிறைவேறுகின்றன. மற்றொரு அற்புதக் குளத்திற்கு சுந்தரக்குளம் என்று பெயர். இக்குளத்தில் அழகேசனான பரமசிவத்தைத் துதி செய்து நீராடுபவர்கள் எத்தகைய மோசமான தோற்றம் உடையவர்களானாலும், குரங்கு போன்ற முகம் உள்ளவர்களாக இருந்தாலும், மிக அழகிய தோற்றம் உள்ளவர்களாக எழுந்து வருகின் றனர். தில்லையில் திருநீலகண்டத்துக் குயவனாரை இளமையாக்கிய திருக்குளம் போன்று காஞ்சிபுரத்தில் ஈசன் பெயர் ஓதி நீராடுபவர்களை சுந்தரக்குளம் அழகாக்கு கின்றது. இவையே அல்லாமல் பைம்புனல் கிணறு, உலகாணி, சந்திரமாதிரம், காப்புடைத் தீர்த்தம், சாருவ தீர்த்தம், மங்கல தீர்த்தம் எனப் பலப்பல புனித நீர் நிலைகள் காணப்படுகின்றன.

காஞ்சிபுரத்தில் உள்ள மிக விந்தையான ஒரு இடம் மாயமண்டபம். இந்த மண்டபத்திற்குள் நுழைந்த வர்கள் யாராயினும் அவர்கள் மற்றவர்களின் கண் களுக்குப் புலனாகமாட்டார்கள். ஆனால் அ்வர்களால் எல்லோரையும் பார்க்க முடியும். வாலிக்குப் பயந்து வந்த சுக்ரீவன் இங்கு தங்கியிருந்தான்.

கச்சியேகம்பத்தில் இன்பக்குகை ஒன்றுள்ளது. சிவப்பரம்பொருளின் நினைவோடு இந்தக் குகையில் நுழைந்து அங்குள்ள லிங்கத்தைத் தரிசனம் செய்து வலம்வருபவர்களின் துன்பம், கவலை எல்லாம் விலகிப் போக மிகுந்த இன்பம் பெறுகின்றார்கள். இன்பேசுவரன் விளங்கும் இன்பக் குகையே அல்லா மல் குரங்கு வடிவம் கொண்ட மற்றொரு குகையும் உள்ளது. இதுவே சுக்ரீவன் தங்கியிருந்த குகையாகும்.

இவ்வாறு எண்ணற்ற கோயில்களையும் தீர்த்தங்களையும் அற்புதங்களையும் அதிசயங்களை யும் கொண்ட காஞ்சிபுரம் பதினான்கு உலகங்களிலும் உள்ள வளங்களையெல்லாம் கொண்டுள்ள கொள் கலம் என்று கூறும்படி பொலிவுற்றுப் புகழ்பெற்று விளங்கியது.

வேதம், ஆகமம், வேள்வி, வழிபாடு, திருவிழா, எனப் பொலிவுறும் காஞ்சிபுரத்தின் பெருமை யெல்லாம் கண்டு ஒரு வேடன் கரிகால சோழனுக்கு காஞ்சிபுரத்தின் அற்புதத்தையெல்லாம் விளக்கினான். காஞ்சிநகரின் அருமையை உணர்ந்த கரிகால் வளவன் நான்கு காத தூரத்தை உள்ளடக்கி மதில் எழுப்பினான். பலவகைக் குடியிருப்புகளை உண்டாக்கினான். திருமறைகள் ஒலிக்கும் தெய்வீகக் காஞ்சிபுரத்தில் கோயில்களில் குறித்த நேரத்தில் பூசைகள் எல்லாம் சிறப்பாக நடைபெறுவதற்கு உறுதி செய்து ஆலயங் களின் பாதுகாப்பிற்காக மந்திர மாமதில் அகதி களை உருவாக்கினான். பூசை செய்வதற்குப் பூக்கள் தடையின்றி, குறைவின்றி கிடைப்பதற்காக மலர்க் கிடங்கு அமைத்தான்.

கரிகால் சோழனுக்குப் பிறகு பல பல்லவ மன்னர்கள் காஞ்சிபுரத்தைக் கண்ணும் கருத்துமாகக் காத்து வந்தனர். காஞ்சிபுரத்தின் பெருமைக்கெல்லாம் பெருமை சேர்ப்பது, அழகுக்கு எல்லாம் அழகு அளிப் பது பக்தர்களையெல்லாம் பரவசப்படுத்துவது காஞ்சி கைலாச நாதர் திருக்கோயில். எண்ணற்ற கல்வெட்டு களைக் கொண்டு சரித்திரச் சான்றாகவும், கலைநுட்பங் களைக் கொண்ட கலைக் கூடமாகவும் சிவப்பரம் பொருளே கும்பாபிஷேகத்திற்கு நாள் குறித்த தெய் வீகம் கொண்ட அற்புதத் திருக்கோயிலாகவும் கைலாச நாதர் கோயில் விளங்குகிறது. வண்ண வண்ண ஓவியங் களையும் அருமையான சிற்பங்களையும் கொண்ட கைலாச நாதர் கோயில்லைக் கட்டி முடித்த பல்லவ மன்னன் குட முழுக்குத் திருநிகழ்ச்சிக்காக நாள் குறித்து கும்பாபி ஷேகத்திற்கான ஏற்பாடுகளை செய்யத் தொடங்கினான். அப்பொழுது வானிலே குரல் ஒலித்தது. ''நீ குறித்த நல்ல நாளில் திருநின்றவூரில் உள்ள பூசலார் கட்டிய கோயில் கும்பாபிஷேகம் நடைபெற இருப்பதால் நல்ல முகூர்த்த நாளாக விளங்கும் மறுநாள் இக்கோயில் கும்பாபிஷேகத்தை வைத்துக்கொள்வா யாக'' என்று சிவப்பரம்பொருள் வானில் அருளிச் செய்தார். பரமனது திருக்குரலைக் கேட்கும் பெரும் பேறு பெற்ற மன்னன் அளவில்லாத ஆனந்தம் அடைந்து இறைவன் கூறிய பூசலார்ப் பெருந்தகையார் கட்டிய கோயிலைக் காண வேண்டும் என்ற விருப்பத்துடன் திருநின்றவூருக்குச் சென்றார்.

சென்னையை அடுத்த திருநின்றவூரில் பூசலார் என்னும் ஏழை அந்தணர் வாழ்ந்து வந்தார். பரம் பொருளை வழிபடும் செம்மையான சிவநெறியில் நின்ற அவர் இரவும் பகலும் சிவசிந்தனையுடன் சிறந்த பக்தராகத் திகழ்ந்தார். சிவப்பரம்பொருளுக்குக் கோயில் கட்ட வேண்டும் என்று விரும்பினார். ஆனால் பொருள் வசதி இல்லாததால் அந்த எண்ணம் நிறைவேறாமல் போயிற்று. கோயில் கட்ட வேண்டும் என்ற ஆவல் நாளுக்கு நாள் அதிகரித்து வந்ததால் நெஞ்சிலேயே ஆலயம் அமைக்கத் தொடங்கினார். ஒரு நல்ல நாள் பார்த்து கோயில் கட்டுவதற்கான பொருட்களையும் ஆட்களை யும் மனதால் சேகரித்தார். பின் ஒரு நல்ல நாளில் திருப்பணியைத் தொடங்கி கருவறை, பிரகாரம்,

மண்டபம், விமானம், கோபுரம், மதில் என எல்லா வற்றையும் பார்த்துப் பார்த்துக் கட்டினார். கோயில் முழுவதும் அழகுற முற்றுப்பெற்று பூச்சு, சுதை எல் லாம் முடிந்த பின்னர் ஒரு நன்னாளில் கும்பாபி ஷேகத்திற்கு நாள் குறித்தார். பூசலார் கட்டிய இந்த மனக் கோயிலில் எழுந்தருளுவதற்காகவே சிவப்பரம் பொருள் பல்லவ மன்னனிடம் அவன் கட்டிய கைலாச நாதர் கோயில் கும்பாபிஷேகத்தை அடுத்த நாள் வைத்துக் கொள்ளுமாறு அருளிச் செய்தார்.

திருநின்றவூர் சென்ற பல்லவமன்னன் பூசலார் கட்டிய கோயிலைப் பற்றி வினவினான். பூசலார் மிகுந்த ஏழை என்பதும் அவர் எந்தக் கோயிலும் கட்ட வில்லை, கும்பாபிஷேகம் நடைபெறத் தக்க வேறு எந்தக் கோயிலையும் யாரும் கட்டவில்லை என்பதை யும் அறிந்தான். பரம்பொருளின் பேரருளுக்குப் பாத்திர மான அப்பூசலார் எங்குள்ளார் என்று அறிந்து அவ ரிடம் சென்று அவர் கட்டிய கோயிலைப் பற்றிக் கேட்பான். கோயில் கட்ட பொருள் இல்லாததால் அன்பால் அக்கோயில் கட்டியதைப் பூசலார் உரைத் தார். பக்தரின் பக்திக்குப் பரமன் காட்டிய பெருங் கருணையை வியந்த பல்லவன் பூசலாரை வணங்கி அவர் சிறப்பாக வாழ்வதற்குத் தேவையான வசதி களைச் செய்தான். வணங்கிய மன்னனைத் தடுத்து எதிர் வணங்கிய பூசலாரைக் கைலாச நாதர் கோயில் கும்பா பிஷேகத்திற்கு வருமாறு அழைப்பு விடுத்தான். பூசலார் கட்டிய மனக்கோயிலில் எழுந்தருளியதால் சிவப்பரம் பொருளுக்கு மனக்கோயில்நாதன், நெஞ்சாலயன் என்ற பெயர்கள் உண்டாயின. பூசலார் கட்டிய மனக் கோயிலில் குடிகொண்ட மனக்கோயில் பெருமா னுக்குப் பல்லவ மன்னன் திருநின்றவூரில் கோயில் கட்டி வழிபட்டான். இக்கோயில் வடமொழியில் இருதயாலீசுவரர் கோயில் என்று வழங்கப்படு கின்றது.

இவ்வாறு காஞ்சியில் உள்ள கைலாசநாதர் கோயிலுக்கு சிவப்பரம்பொருளாலேயே கும்பாபிஷேக நாள் குறிக்கப்பட்டதை அக்கோயில் கல்வெட்டுகள் எடுத்துரைக்கின்றன. பண்டைய யுகங்களிலே பக்தர் கள் மன்னர்கள் பரமன் திருக்குரலைக் கேட்டதும் திருக்காட்சி கண்டதும் பெரிதல்ல. ஆனால் இந்தக் கலியுகத்தில் பரமசிவத்தின் திருவாக்கினைக் கேட்ட மன்னனின் பக்தி போற்றத்தக்க விந்தை என்று அக் கல்வெட்டுச் செய்தி கூறுகின்றது.

''மன்னிய சீர் மறைநாவல் நின்றவூர்ப் பூசல்'' என்று சுந்தரர் பூசலாரைப் போற்றுகின்றார்.

சுந்தரரால் வணங்கப்பட்ட மற்றொரு அடியார் திருக்குறிப்புத்தொண்டர் .தெய்வீகம் நிறைந்த காஞ்சி புரத்தில் ஒரு வண்ணார் வாழ்ந்து வந்தார். மெய்ப் பொருளை வழிபடும் சிறந்த சிவபக்தராக விளங்கி னார். நாள்தோறும் ஏகாம்பரேசுவரரை வழிபட்டு வந்தார். அடியவர்களின் ஆடையைத் தோய்த்துக் கொடுக்கும் திருத்தொண்டினை நியமமாக, விரத மாகக் கொண்டிருந்தார். அன்பர்களின் குறிப்புணர்ந்து அவர்களுக்குத் தானே வலிய தொண்டு செய்ததால் திருக்குறிப்புத் தொண்டர் என்று யாவராலும் அழைக்கப்பெற்றார். எச்செயலைச் செய்தாலும் ஈசன் புகழ்பாடிச் செய்யவேண்டும் என்று வழிகாட்டிப் பாடிய மாணிக்கவாசகரது நெறியில் நின்று ஆடை களைத் தோய்க்கும் போதெல்லாம் அர்த்தமற்ற ஒலி எழுப்பாமல் சிவப்பரம் பொருளின் திருநாமம் ஓதி சலவை செய்தார்.

செம்மையான பரம்பொருளை வழிபடும் சிவபக்தியினாலும் அடியவர்களின் ஆடையை வெளுத் துத் தரும் திருத்தொண்டினாலும் திருக்குறிப்புத் தொண்டரின் ஆத்மா ஆணவம், கர்மம், பிறவி என்னும் மூன்று அழுக்குகளும் நீங்கிச் சுத்தமானது. மாசுகள் எல்லாம் நீங்கித் தூய்மை அடைந்த உயிர் தூய செம்பொருளாம் சிவத்துடன் கலந்து சிவமாகும் மாபெரும் தகுதியைப் பெற்றது. இதனால் ஒருநாள் உச்சியில் அன்பர்க்கு அன்பரான ஏகம்பர் திருக்குறிப்புத் தொண்டரின் முன் அடியவராக எழுந்தருளினார். அடியவரைக் கண்ட திருக்குறிப்புத் தொண்டர் விரைந்து வந்து அவருடைய ஆடையைத் துவைப்பதற்குத் தருமாறு கேட்டார். அன்று மாலைக்குள் தோய்த்துத் தருவதாக இருந்தால் ஆடையைக் கொடுப்பதாக அடியார் கூறினார். திருக்குறிப்புத் தொண்டரும் மாலைக்குள் தோய்த்து உலர்த்திக் கொடுத்து விடு கிறேன் என்று வாக்குறுதி கொடுத்து ஆடையைப் பெற்றுக் கொண்டார். திருக்குறிப்புத் தொண்டர் ஆடையை நீரில் நனைத்துத் தோய்க்கத் தொடங்கிய போது பெருமழை பொழிந்தது. பொழிந்த மழை நிற்கவேயில்லை. பரமனது திருவருளைப் போன்று பொழிந்து கொண்டே இருந்தது. மாலைப்பொழுதும் வந்தது. அடியார் வந்து கேட்டால் என்ன செய்வது? சொன்ன சொல்லைக் காப்பாற்ற முடியவில்லையே. அடியவருக்குத் தீங்கு செய்து விட்டோமே என்று வருத்தம் அடைந்து இனி உயிரோடு இருப்பதை விட இறப்பதே மேல் என்று முடிவு செய்த திருக்குறிப்புத் தொண்டர் பாறையில் தலையை முட்டி மோதிக் கொள்ளத் தொடங்கினார். அப்போது சிவப்பரம்பொரு ளின் திருக்கரம் அவரைத் தடுத்து நிறுத்தியது. நிமிர்ந்து பார்த்த திருக்குறிப்புத் தொண்டர் நந்தி வாகனனாகப் பரம சிவத்தின் காட்சியைக் கண்டார். தவம் செய்யும் முனிவர்களுக்கும் காணக் கிடைக்காத சிவப்பரம் பொருளின் திருவடிகளில் விழுந்து வணங்கினார்.



பழநி அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் இணை ஆணையாளர் - நிர்வாக அதிகாரி திருமிகு கே.கே. இராஜா அவர்கள் குடிநீர் வடிகால் வாரியத்திற்கு ரூபாய் 107 இலட்சங்களுக்கான காசோலையைச் செயற்பொறியாளர் வசம் வழங்குகின்றார். திருக்கோயில் உதவி ஆணையர் திரு பி.ஆர். அசோக், முதுநிலை கணக்கியல் அலுவலர் திரு ப. இராஜேந்திரன் ஆகியோர் உடன் உள்ளனர்.

பரமசிவம் திருக்குறிப்புத் தொண்டருடன் மறைந்தார். மும்மூர்த்திகளும் இந்திராதி தேவர்களும் வந்து வணங்கும் சிவப்பதத்தைத் திருக்குறிப்புத் தொண்டர் பெற்றார். இவ்வுலகில் வாழும்பொழுதே பரம சிவத்தின் திருக்காட்சி கண்டவர் ஆதலால் திருக் குறிப்புத் தொண்டர் ஜீவன் முக்தர்களுள் ஒருவரானார்.

''திருக்குறிப்புத் தொண்டர்தம் அடியார்க்கும் அடியேன்'' என்று திருக்குறிப்புத் தொண்டரை சுந்தரர் போற்றுகின்றார். திருவொற்றியூர் எல்லையைத் தாண்டிய அளவில் இரு கண்களும் பார்வை இழந்த சுந்தரர் அடியார்களுடன் தொடர்ந்து பயணமானார். திருவெண்பாக்கத்தில் (பூண்டி) பரம் பொருளை வேண்டி ஊன்றுகோலைப் பெற்றார். இதனால் ''கண்ணைப் பறித்தாலும் கோலைக் கொடுப்பான்'' என்ற பழமொழி உண்டானது. அடியார்களுடன் பயணம் செய்த சுந்தரர் காஞ்சிபுரத்தை அடைந்தார். வேள்விகளும் வழிபாடுகளும் திருவிழாக்களும் நிறைந்த தெய்வக் காஞ்சியில் ஏகாம்பரேசுவரர் திருக்கோயிலுக்குச் சென்று தொழுதார். ஏகாம்பரேசு வரர் சுந்தரருக்கு ஒரு கண்ணின் பார்வையை அருளிச் செய்தார்.

''கம்பன் எம்மானைக் காணக் கண் அடியேன் பெற்றவாறே'' என்று சுந்தரர் ஏகம்பனைக் கண்டு களித்துப் பாடினார்.

இவ்வாறு காமாட்சியம்மன் முதலாக காஞ்சி ஏகாம்பரேசுவரரின் திருவருள் பெற்ற தெய்வங்கள், தேவர்கள், அருளாளர்கள், அடியார்கள் பலப்பலர். காஞ்சிபுரத்தின் பெருமையும் அருமையும் சொல் லுக்குள் அடங்குவன அல்ல. ''கற்றது கைம்மண்ணளவு கல்லாதது உலகு அளவு'' என்பது போல் சொன்னது கொஞ்சம் சொல்லாதது அதிகம். காஞ்சிப் புராணம் படித்தாலும் காஞ்சியின் அருமை பெருமைகள் சொல்லி முடியா. இத்தகைய காஞ்சிபுரத்தை வாழ் நாளில் ஒரு முறையாவது சென்று தரிசனம் செய்ய வேண்டாமோ?

***

# ஆன்மீகம்

- மயிலை சிவஞானஜோதி சிவசக்தி அம்மையார்

ஓம்! ஓம்! ஓம்!
அருட்பெருஞ்ஜோதி! அருட்பெருஞ்ஜோதி!
தனிப் பெருங் கருணை! அருட்பெருஞ்ஜோதி!

பல்லவி

அருள் மழை பொழியட்டும் - அகிலத்தில்
அருள் ஜோதி நிறையட்டும் - அகிலத்தில்
ஆன்ம ஆற்றல் வளரட்டும் - அகிலத்தில்
ஆன்மீகம் மலரட்டும்
தரணீஸ்வரி உடை
தரணீஸ்வரன் அருளில் (அருள்)

**சரணம் - 1**

இறைவன் பற்று வளரட்டும் - அகிலத்தில்
இயற்கையை மனிதன் ரசிக்கட்டும்
தன்னம்பிக்கை வளரட்டும்! - தரணியில்
தன்னை மனிதன் உணரட்டும்!
தரணீஸ்வரி உடை தரணீஸ்வரன் அருளில்
(அருள்)

**சரணம் - 2**

அறியாததை மனிதன் அறியட்டும்
புரியாதது புரியட்டும் - புவியில்
அடையாததை அடையட்டும் - ஆன்ம
அனுபவ இன்பம் மலரட்டும்!
தரணீஸ்வரீ உடை தரணீஸ்வரன் அருளில்
(அருள்)

**சரணம் - 3**

கேளாததைக் கேட்கட்டும் - தரணியில்
காணாததைக் காணட்டும் - ஆத்மன்
எட்டிடா ஒன்றை எட்டட்டும்! - மகிழ்ந்து
சுட்டிடா ஜோதியுள் ஆடி சுற்றட்டும்
தரணீஸ்வரீ உடை தரணீஸ்வரன் அருளில்
(அருள்)

**சரணம் - 4**

அருட் ஜோதியின் மேன்மை தழைக்கட்டும்
அகிலத்தின் அக இருள் அகலட்டும்
அகிலத்தை ஆன்மீகம் ஆளட்டும்
ஆன்மீக அறிவொளி பரவட்டும்
தரணீஸ்வரீ உடை தரணீஸ்வரன் அருளில்
(அருள்)

***அகிலத்தை ஆன்மீகம் - ஆளட்டும்!***

ஆன்மீகமே நமது சொத்து. அஞ்ஞானம் நீக்கி மெய் ஞானம் அருள்வது ஆன்மீகம். இவ்வுலகில் ஆன்மீகத் திருப்பணிகள் சிறப்பாகத் தொடர எல்லாம் வல்ல இறைவன் அருள்புரிவாராக! ஆன்மீகத் திருப் பணிக்கே மனிதன் அவதரிக்க வேண்டும். ஆனந்த அனுபூதி தருவது ஆன்மீகமாகும். ஆன்மீக ஞானம் வளர்ந்து, ஆத்மா ஆனந்தம் அடைந்து, ஆத்ம நிவே தனம் செய்திடணும். ஆன்மீகத்தைத் தனது கண்ணாகக் கருதி, ஆன்மீக அருந் தொண்டுகள் செய்திடணும். ஆன்மீகத் திருப்பணியால், ஆன்மீகக் கருத்துக்களால், அன்பர்கள் உள்ளங்களைக் கவர்ந்திடல் வேண்டும். ஆன்மீகமாம் அன்புப் பால் கலந்து, ஆண்டவன் புகழ்ப் பாடிடல் வேண்டும். ஆன்மீகத்தில் உயர்ந்து, ஆண்டவ னின் அன்புக் குழந்தையாகி, ஆன்மீக மார்க்கத்தால் ஆண்டவனை அடைந்திட ஆர்வமுள்ள மக்களை அழைத்திடல் வேண்டும். அன்பை வளர்ப்பதில் ஆர்வம் கொண்டு ஆன்மீகத்தில் இன்பமடைய வேண்டும். ஆன்மீகத்தில் உயர்ந்து, தெய்வீகத்தில் நிறைந்து ஆன் மீகத் தொண்டினைச் செய்திடுங்கள். ஆன்மீகத்தினால் ஆண்டவன் தரிசனம் கண்டிடுங்கள். ஆன்மீகத் திருப் பணி பக்தியை வளர்த்திடும்; ஆன்மீகத்தில் உயர்த்தி நல் முக்தியை அளிக்கும். அடிமுடி காணாத அருட் பெருஞ்ஜோதியாம் இறைவனைக் காட்டும். ஆனந்தத் தாண்டவத் திருவடியில் சேர்க்கும். ஆன்மீகத் திருப் பணி ஆண்டவனின் திருப்பணியாகும். ஆன்மீகத் தில் உயர்ந்திட இறை பணி தேவை. இறைபணியே நான்மறை ஓதும் திருப்பணி. ஆன்மீக சத்சங்கம் கூட்டிடுங்கள். ஆன்மீக சற்சங்கம் அமைதி கிடைத் திட சிறந்த வழியாகும்.

*ராகம்:- புன்னாகவராளி* *தாளம்:- ஆதி*

**பல்லவி**

ஆன்மீக சத்சங்கம் அமைதிக்கு வழியாம்
அமைதியாம் மனமே ஆண்டவன் இடமாம்

***



சேலம் மாவட்டம் பூலாம்பட்டி அருள்மிகு கைலாசநாதர் கோயிலில் பணிபுரிந்து, பணிக்காலத்தில் இறந்து போன சந்திரசேகர குருக்களின் மனைவி திருமதி சரசுவதி அம்மாளுக்குச் குடும்ப நலநிதி ரூ. 60,000க்கான வங்கி வரைவோலையை சேலம் இணை ஆணையாளர் திருமிகு ச. இளங்கோ. பி.ஏ., பி.எல். அவர்கள் வழங்குகிறார்கள்.

**அனுபல்லவி**

ஆண்டவனின் இருப்பிடத்தில் அன்புமிகப் பொங்கும்
அன்புப் பொங்குவதால் அருளும் பொங்கும்
(ஆன்)

**சரணம்**

மக்களின் தொண்டே மகேசன் தொண்டாம்
மனதில் மகேசன் மகிழ்ந்து உறைவான்
பாரபட்சம் அற்ற பலன் பாராத் தொண்டால்
பரமனின் பேரன்பும் அருளும் பொங்கும்
(ஆன்)

★★★

வாழ்ந்து மடிய நாம் பூமியில் பிறக்கவில்லை. வாழ்ந்து சாதிக்கத்தான் வந்துள்ளோம். ஆழ்ந்து உறங்கும் ஆத்மனின் அறிவைத் தூண்டி விழிப்படையச் செய்திடணும். ஞான அறிவைத் தூண்டி விட வேண்டும். ஆத்மனின் நல்லொழுக்க சாதனையால் ஆத்ம ஜோதி ஜொலித்திடணும். ஆன்மீகத்தினில் உயர்த்திடணும். ஆத்மசக்தி விழித்து எழுந்து விட்டால், அழிவற்ற சிவஞான அருட்பெருஞ் ஜோதியுள் கலந்து, பின்பு கரைந்து அருட்பெருஞ் ஜோதியாகும். ஆன்மீகத்தின் சிறப்பினால் பரமனின் பேரன்பைப் பெற்றுவிட்டால், பரஞ்ஜோதி வந்து அணைத்துக் கொண்டால், பரமனின் பேரறிவும், பேராற்றலும் வந்து பொருந்தும். ஆன்ம பசி தாகம், ஆன்மீக உழைப்பும், ஆண்டவன் குணமும் சுயமாக . வரணும். ஆழ்ந்து உறங்கும் ஆத்மனை துன்பத்தில் துவண்டு விழாமல் துள்ளி எழ அழைத்திடணும். நல்ல குணங்களுடன் கடமைகளைச் செய்வதே ஆன்மீக சாதனைகள் ஆகும். ஆன்மாவின் உரிமையுள்ள வீடு செல்வதே ஆன்மீகம்.

ராகம் :- வசந்தா தாளம் :- ஆதி

**பல்லவி**

ஆன்மீகம் என்பதின் பொருள் என்ன?
ஆன்மாவின் உரிமையுள்ள சொந்த வீடு ஆகும்
(ஆன்)

**அனுபல்லவி**

ஆன் என்றால் ஆன்மா மீ என்றால் உரிமை
அகம்என்றால் வீடாகும் அன்றோ (ஆன்)

**சரணம் - 1**

நெறி முறைகள் வகுப்பது அறநெறிகள் உரைப்பது
அறிவுரை அருளுரைகள் உணர்த்திடும் ஆன்மீகம்
உயர்ஞானம் அளிப்பதும் உயர் வாழ்வு அளிப்பதும்
உரிமையுள்ள உடையவனிடம் சேர்த்திடும் ஆன்மீகம்
(ஆன்)

*சரணம் - 2*

அஞ்ஞான இருள் நீக்கி மெய்ஞானம் வளர்த்து
அனுபவப் பேரின்பம் அருளிடும் ஆன்மீகம்
சுவயமாக நல்ல குணம் வளர்த்திடும் ஆன்மீகம்
சுவயமான அகமாம் சுவர்க்க வீடு ஆன்மீகம்
(ஆன்)

★★★

ஆன்மீகம் என்பதின் பொருள், ஆன்என்றால் ஆன்மா, மீஎன்றால் உரிமை, அகம் என்றால் வீடு ஆகும் அன்றோ. ஆன்மீகம் என்றால் ஆன்மாவின் உரிமையுள்ள சொந்த வீடு ஆகும். சுவயமான அகமாம் வீடு சுவர்க்க வீடு ஆகும். ஆத்மாவின் உரிமையுள்ள நிலையான சொந்த வீட்டுக்குச் செல்லும் பாதையே ஆன்மீகப் பாதையாகும். அதற்கு நல்ல குணங்களுடன் கடமைகளைச் செய்வதே ஆன்மீக சாதனைகள் ஆகும்.

அறம் பொருள் இன்பம் வீடு நான்கினையும் நாளும் எந்தெந்த வேளையிலும், பற்றுடன் செய்து அனுபவித்து பலன் எதிர்பாராது பற்று அற்று இருப்பதே சிறந்த ஆன்மீகத் துறவாகும். அறன் எனப்பட்டதே இல் வாழ்க்கை. ஆன்ம உணர்வுடன் இல்லறம் பற்று. ஆன்மீக உணர்வுடன் இறைவனைப் பற்று.

*ராகம்:- அடாணா* *தானம் :- ஆதி*

*பல்லவி*

இறைவனின் நாமத்தை பற்றிக் கொண்டு
பற்றற்று இல்லறம் பற்று

*அனுபல்லவி*

இல்லறம் பற்றியும் மனதில் பற்றில்லாமல்
இறைவனின் திருவடி பற்று

*சரணம் - 1*

மனதில் நாமத்தைப் பற்றி கொண்டு
உடலால் செயல்களைப் பற்று
தாமரை இலைத் தண்ணீர்ப் போலே
பற்றாது இல்லறம் பற்று

*சரணம் - 2*

ஆன்ம உணர்வுடன் இல்லறம் பற்று
ஆன்மீக உணர்வுடன் இறைவனைப் பற்று
பற்றற்றான் பற்றினைப் பற்றியே - உடலில்
பற்றாது இல்லறம் பற்று

*சரணம் - 3*

உலகோடு பற்றியும் உலகில் பற்று இன்றி
உடலோடு பற்றியும் உடலில் பற்று இன்றி
உடலில் உள்ளத்தில் இறைவனைப் பற்றியே
பற்றாது இல்லறம் பற்று

*சரணம் - 4*

பூரணப் பண்பு பூரண பக்தி
பூரண சங்கமம் பூரணத் தியாகம்
பூரண அன்பாம் சரணாகதியாய்
பூரணன் திருவடி பற்று (இறை)

★★★

ஆன்மீகத்தினில் உயர்ந்து வெற்றிகாண வேண்டுமானால், சாதி சமய வேறுபாடு அழியனும், சாதி சமய வேறுபாடு அழிய, பக்தி மார்க்கமே சிறந்த வழித் துணையாகும். மனதில் கடவுள் எண்ணம் நிறைந்து விட்டால் சாதி சமய ஏற்றத் தாழ்வு குறைந்துவிடும். ஒற்றுமையாய் நீதி தவறாமல் வாழனும். மனிதன் மனிதனை மனிதனாக மதிக்கனும். மனிதருள் சிறக்கனும். மத வெறியைத் தவிர்க்கனும். மனித நேயம் ஆன்ம நேயம் வளர்க்கனும். இனத்தால் மொழியால் வேறுபடாமல், அன்புடன் ஆத்ம திருப்தியுடன், பசியால் நோயால், வாடும் உயிரைக்கண்டு மனிதன் முடிந்த வரை உதவனும், உதவ முடியாதவன் கடவுளிடம் முறையிட்டு வருந்தனும். மனிதனை மனிதனே அழிக்காமல் மனிதனை மனிதனாக மதிக்கனும். மதங்கள் கூறும் புனித அறிவுரைகள் வழிமுறைகள் படி நடக்கனும். மனதின் மாசினை நீக்கனும். அறியாமையை நீக்கனும். மனிதனுக்கு உடல் வளர்ச்சியடைந்தால் போதாது. உள்ளப் பக்குவம் ஆகிடல் வேண்டும். ஆண்டவனைக் கலந்து இன்புறும் ஆன்மாவின் விடுதலையே ஆன்மீகப் பாதையினில் மனிதனின் இலட்சியமாக இருக்கனும்.

ஆன்மீகத்தின் சிறப்பான குணங்கள் பலவாகும். மனிதன் சாந்தகுணம் உள்ளவனாக, சமநோக்கு உள்ளவனாக இருக்க வேண்டும். பண்பும், பக்தியும், பாசமும் உள்ளவனாக, அன்பும், அறிவும், ஆற்றலும் உள்ளவனாக, சத்தியம், தர்மம், நீதி நேர்மை காப்பவனாக இருக்க வேண்டும் கடமை, கண்ணியம், கட்டுப்பாடுடன், கனிவு, கருணை, உண்மை உள்ளவனாக இருக்கனும். பகைவனுக்கும் உதவும் நல்ல குணம் வேண்டும். பாரபக்ஷமில்லாத - பலனை எதிர்பார்க்காத நல்ல குணம் வேண்டும். துறவாமல் துறவியாகும் பலனைத்துறக்கும் துறவு வேண்டும். மனிதன் ஒருவனே சிந்திக்கும் திறமையும், சிந்தித்ததை எடுத்துப் பேசும் திறமையும் பெற்றவன். இப்படிப்பட்ட சிறப்பினைப் பெற்ற மனிதன் சிந்தனை, சொல், செயல் மூன்றிலும் ஒன்றாக இருந்து தூய்மையாய் விளங்கிட வேண்டும்.

*ராகம்:-* *தாளம்*

*பல்லவி*

சொல்லும் செயலும் ஒன்றாயிருந்தால்
மனம் தூய்மை பெறும்!

அனுபல்லவி

சித்தனை, சொல், செயல், ஒன்றாயிருந்தால்
அதுவே தெய்வீகம்!

சரணம் - 1

அன்பற்ற பேச்சில் அன்பற்ற செய்கையில்
தெய்வீகத் தன்மை இல்லை
அன்பு மயமாக்கி செயல்களை செய்திடும்
பக்குவமே தெய்வ குணம் அன்றோ!

சரணம் - 2

அன்பினில் செயல்படும் மனிதாபிமானம்
ஆன்மீக மறு மலர்ச்சி!
அன்பு என்பது நம் மதமே
எம்மதமும் இங்கு சம்மதமே!

★★★

அறியாமையில் மூழ்கிய மனிதனை சிந்திக்க வைப்பது ஆன்மீகம்! பக்தியுடன் பரமனைப் பாட வைப்பதும் ஆன்மீகம்! குருபக்தி உள்ளவனாக, குருவின் அறிவுரையில் நம்பிக்கை உள்ளவனாக இருக்கணும். ஆன்மீகத்தில் உயர்ந்த ஆத்ம ஞானம் பெற்ற சத்குருவை நம்பியவன் ஆத்ம ஞானம் பெறுவான். சந்தேகம் இல்லை. ஆன்மீகத்தில் உயர்ந்த ஆத்ம ஞானம் பெற்ற சத்குருவானவன் வேற்றுமை காண்பது இல்லை. குருவருள் இன்றித் திருவருள் இல்லை.

தமிழ் மொழியால் ஆன்மீகத்தில் உயர்ந்தவர்களை அளவிட்டு சொல்ல முடியாது. திருமூலர், திருவள்ளு வர், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர், ஔவையார் காரைக்கால் அம்மையார், வள்ளலார், தாயுமானவர், அருணகிரி நாதர், ஆழ்வார்கள், அகத்தியர், ஸ்ரீவில்லிபுத்தூர் ஆழ்வார், பாரதியார், இவர்கள் போன்றவர்கள் தமிழால் உயர்ந்தனர்.

தியாகராஜ சுவாமிகள், பத்ராசல ராம்தாஸ் போன்ற பலமகான்கள் தெலுங்கு மொழியில் பாடி உயர்ந்தனர். ஜயதேவர், நாராயண தீர்த்தர், பிரும்மேந்திராள் போன்றோர் ஸம்ஸ்க்ருத மொழியில் பாடி ஆன்மீகத்தில் உயர்ந்தனர். மீரா, சூர்தாஸ், கபீர்தாஸ் போன்றவர்கள் ஹிந்தி மொழியில் பாடி உயர்ந்தனர். துக்காராம், ஏக்நாத், கோராகும்பர் போன்றவர்கள் மராட்டி மொழியில் பாடி உயர்ந்தனர். மகான்கள் யாவருமே அவரவரது தாய் மொழியால் இறைவனைப் பாடிப்பாடி ஆன்மீகத்தினில் உயர்ந்தனர். அடியேன் எனது தாய்மொழியாம் தமிழ் மொழியில் பாடி ஆன்மீகத்தில் உயர்ந்து சுவர்க்க வீடாம் சொந்த வீடாம் சுவயம்பு ஜோதியுள் கலந்து கொண்டுள்ளேன். ஒரு நாள் கரைந்து விடுவேன். சாதாரணமாக வாழ்க்கையினில் சிக்கல்கள் கஷ்டங்களினால்தான் ஆன்மீக உணர்வுகள் அதிகமாகி ஆன்மீகத்தினில் மனிதன் வளர்ச்சியடைய முடியும்.

ராகம்:- தாளம்

பல்லவி

ஆன்ம சக்தி வளர வளர / மனதின் சிறப்பு
மின்ன மின்ன
ஆணவமாம் அகந்தை அழிகின்றது

அனுபல்லவி

தன்னடக்கம் வளரவளர / கோபம் காமம்
தணிய தணிய
அன்பும் இன்சொல்லும் வளர்கின்றது.

சரணம்

ஆன்ம நலம் வளர வளர / உடல் நலம் குறைய
குறைய
ஆண்டவன் நினைப்பும் வருகின்றது
இறைவன் குணம் வளர வளர / இதயம் குளிர்ந்து
கனிய கனிய
இறைவனின் அன்பும் கிடைக்கின்றது

சரணம் - 2

பக்தி நிலை வளர வளர / தன்னலம் குறைய குறைய
பரமனின் திருவருளும் கிடைக்கின்றது
முக்தி நிலை வளர வளர / முத்தமிழில் பாடப்பாட
பரமனின் திருவடியே கிடைக்கின்றது!

சரணம் - 3

மனித குணங்கள் குறைய குறைய / குற்றங்கள்
பெருக பெருக
இவ்வுலக வாழ்க்கை கசக்கின்றது
இறைவனை அறிய அறிய / இறைவன் அன்பு
பெருக பெருக
ஆன்மீக வாழ்வு இனிக்கின்றது / இன்று ஆன்மீக
வாழ்வு இனிக்கின்றது

சரணம் - 4

இறைவனை அடைந்து மருவி
இரண்டறக் கலந்து மகிழ
ஆன்மீக வாழ்வு இனிக்கின்றது
எனக்குள் மட்டும் இறைவன் இல்லை
உனக்குள்ளும் இறைவன் உண்டு என்று
இறைவன் புகழ் சொல்ல சொல்ல இனிக்கின்றது
இவ்வுலக வாழ்க்கை இனிக்கின்றது! (இன்று)

★★★

# முடிச்சூர் ஸ்ரீ வித்யாம்பிகைப் பதிகம்

– கவிஞர் சபரிதாசன்

பூமே வியேஆ ருயிரையெலாம்
புரக்கும் கருணைப் பூங்கொடியே!
நாமே வியேநின் நற்புகழை
நாளும் பாட நனிஅ ருள்வாய்!
காமேச் வரியே! கற்பகமே!
கவினார் தொன்மை மணம்முடிச்சூர்ப்
பீமேச் வரரின் இடப்பாகம்
பிரியா வித்யாம் பிகைத்தாயே! (1)

கருமை பூசும் கயற்கண்ணீ!
கவினார் தாமோ தரன்தங்காய்!
இருமை வாழ்வும் எல்லார்க்கும்
இனிதே அமைய இன்னருள் செய்!
தருமம் மிகுந்த தாம்பரத்தின்
சாமீப் பியத்து மணம்முடிச்சூர்ப்
பெருமை மிகுந்த பீமேசர்
பிரியா வித்யாம் பிகைத்தாயே! (2)

கடியார் மலர்கொள் கார்க் குழலீ!
கனக வல்லீ! கழல்சரணம்
அடியார் போற்றி அனுதினமும்
அன்பால் பரவும் ஆரமுதே!
செடியார் வினைதீர்! மணம் முடிச்சூர்த்
தேவீ! அழியாத் திருஅருளும்
பிடியே! அன்பார் பீமேசர்
பிரியா வித்யாம் பிகைத்தாயே! (3)

ஆசு மதுரம் சித்ரமுடன்
அருள்வித் தாரம் ஆயவையால்
நேசம் மிகுந்துன் நீள்புகழை
நெஞ்சம் கசிந்து பாடஅருள்!
வாசம் மிகுந்த மலர்ச்சோலை
வனமார் தொல்லை மணம்முடிச்சூர்ப்
பேசும் விழியாய்! பீமேசர்
பிரியா வித்யாம் பிகைத்தாயே! (4)

வேதம் நான்கும் விளம்பரிய
விரையார் கழலாய்! விளங்கிழையே!
பூதம் ஐந்தாய்ப் பொலிபவளே!
புலன்கள் ஐந்தும் பொன்ற அருள்!
நாதம் கொண்டு நல்லோர்கள்
நாளும் பாடும் மணம் முடிச்சூர்ப்
பேதம் இல்லாய்! பீமேசர்
பிரியா வித்யாம் பிகைத்தாயே! (5)

நறவார் மலர்சூழ் மணம்முடிச்ச
நல்லூர் வாழும் நாயகியே!
அறவா ழியன்தா மோதரனின்
அன்புத் தங்காய்! அடியனுனை
மறவா தென்றும் மனக்கடலுள்
வைத்துத் துதிக்கும் வரம்அருள்வாய்!
பிறவா நெறிசெய் பீமேசர்
பிரியா வித்யாம் பிகைத்தாயே! (6)

உற்றவளே! எம் உறவினளே!
உயர்வார் மணம்மு டிச்சூர்வாழ்
நற்ற வளே!மெய்ஞ் ஞானியர்கள்
நாளும் பணியும் நாரணியே!
கற்ற வளே! எம் கலிதீர்த்துக்
கருணை யாலே கரைசேர்க்கப்
பெற்ற வளே! அப் பீமேசர்
பிரியா வித்யாம் பிகைத்தாயே! (7)

இணையே ஏதும் இல்லாத
எழிலார் கழல்பூங் கொம்பனையே!
அணையே இல்லா அருள்வெள்ளம்
அமைந்த விழியாய்! அடியேற்குத்
துணையே உன்றன் துணைப்பதங்கள்
சுத்தா னந்த சோதி! இளம்
பிணையே! அருளார் பீமேசர்
பிரியா வித்யாம் பிகைத்தாயே! (8)

மத்தம் குலவு மலர்ச்சோலை
வளமார் பண்டை மணம்முடிச்சூர்
சித்தம் மகிழ்ந்து திருக்கோயில்
தேர்ந்த தேவீ! சிவநேசீ!
கத்தும் தரங்கக் கடல்போலக்
கவலைத் துயரால் கலங்குமெற்கா
பித்தன் அந்தப் பீமேசன்
பிரியா வித்யாம் பிகைத்தாயே! (9)

கூற்றை உதைத்தாய்! மணம்முடிச்சூர்க்
கோயில் கொண்டாய்! கோகிலமே!
சேற்றை ஒத்த சிறியவன்என்
சிந்தை கமலச் சேவடிவை!
ஏற்றை உகந்த எழிலரசீ!
எளியன் பிழைகொய் தினிப்பிறவாப்
பேற்றை அருள்வாய்! பீமேசர்
பிரியா வித்யாம் பிகைத்தாயே! (10)

வாழை மரங்கள் வளம்செய்யும்
வனப்பார் ஆதி மணம்முடிச்சூர்
மாழை நெடுங்கண் மாதரசி
மலர்த்தாள் பணிவார் மனம்மகிழ
ஏழை செல்வர் எவர்எனினும்
இனிதே மங்க லம்தருவாள்
பிழை தீர்த்தே பீமேசர்
பிரியா வித்யாம் பிகைத்தாயே! (11)

★★★

# எண் "எட்டின்" (8) மகிமை

- திருமதி A. பட்டம்மாள் ஆனந்தா

எண் எட்டின் (8) மகிமை அபாரமானது. ஆனால் சாதாரணமாக எண்களில் எட்டு என்பதை நல்ல எண்ணாக கூறுவதில்லை. (ஆங்கிலத்தில் பதின் மூன்றாம் (13) எண்போல).

எண் ஜோதிடத்தில் எட்டு என்ற எண், சனி பகவானுக்குரிய எண். சனி பிடித்திருக்கிறது என்று சாதாரணமாக வழக்கில் சொல்லுவதால் ஏற்படும் பயமும் காரணமாகலாம்.

ஆனால் எண் எட்டின் மகிமையை உணர்ந்தால் நாம் எட்டைக் கெட்ட எண்ணாகக் கருத மாட்டோம்.

ஓம் நமோ நாராயணா என்ற அட்டாட்சர மந்திரத்தின் மகிமையை இராமானுஜர் எல்லோருக்கும் திருக்கோஷ்டியூரில் உபதேசித்ததை நாம் அறிந்ததே. விஷ்ணுவுக்குப் ப்ரீதியான அட்ட தள பூஜையாக

அஹிம்ஸா ப்ரதமம் புஷ்பம்
புஷ்பம் இந்திரிய நிக்ரஹ:
சர்வ பூத தயா புஷ்பம்
க்ஷமா புஷ்பம் விசேஷத:
சாந்தி: புஷ்பம் தப: புஷ்பம்
ஞானம் புஷ்பம் ததைவச
சத்யம் அஷ்ட விதம் புஷ்பம்
விஷ்ணோ: ப்ரீதி கரம்பவேத்

1. அஹிம்ஸா தர்மம் (கொல்லாமை)
2. இந்திரிய நிக்ரஹம் (ஐம்பொறி அடக்கம்)
3. தயாபுஷ்பம் (அன்புடைமை)
4. க்ஷமா புஷ்பம்; இன்பதுன்பத்தைச் சமமாகப் பாவிக்கும் புஷ்பம் (பொறுமை)
5. ஞான புஷ்பம்; விசேஷ ஞானத்தைப் பெற்று மற்றவர்களைத் தெளிவித்தல் (அறிவுடைமை)
6. தபஸ் புஷ்பம் (இறைவனை எப்பொழுதும் நினைத்துத் தவம் பண்ணும் நிலை (தவமுடைமை)
7. த்யானம் புஷ்பம் - மனம் சஞ்சல மில்லாமல் இறைவனை எப்பொழுதும் த்யானம் செய்வது (அருளுடைமை)
8. சத்யம் புஷ்பம் - சத்யம் அனைத்துக்கும் மூலம். சத்யம் என்பது சமதர்மம். பரமாத்மா சத்யமாகவும் இருக்கிறார் (வாய்மை). இவ்வெட்டு புஷ்பங்களும் விஷ்ணுவுக்குப் ப்ரீதியான மலர்கள்.

பிறப்பிற்கு வருவதற்கு முன்பு நாம் ஆணவ மலத்தைப் பற்றி நம் அறிவாற்றல், செயலாற்றல் இவைகளை இழந்திருந்தோம். இந்நிலை கண்டு இறைவன் இரக்கப்பட்டு அருவ நிலையில் உள்ள ஓர் உடம்பை நமக்குத் தந்தான். அவ்வுடலுக்கு நுண்ணுடல் என்று பெயர்

நுண்ணுடல் என்பது மனம், புத்தி, அகங்காரம் என்னும் அந்தக்கரணங்கள் மூன்றும், சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் தன் மாத்திரைகள் ஐந்தும் ஆகிய எட்டு உறுப்புக்களை உடையது. இதனையே ஒளவைப் பிராட்டியாரும் விநாயகர் அகவலில்

புரியட்ட காயம் புலப்பட எனக்குத்
தெரி எட்டு நிலையும் தெரிசனப்படுத்தி

என்று கூறுகிறார்.

அட்ட மூர்த்தியாம் சிவ பெருமான் எட்டு வடிவங்களில் சூரியன், சந்திரன், நிலம், நீர், தீ, காற்று வான், உயிர் என்னும் எட்டுப் பொருள்களின் அகத்தும், புறத்தும் அது அதுவாய் வியாபித்து இருக்கின்றான். இவ்வாறு இறைவன் எட்டுப் பொருள்களிலும் வியாபித்திருப்பதை "அட்ட மூர்த்தம்" என்கிறோம்.

இதனையே திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய நின்ற திருத்தாண்டகத்தில்

இரு நிலனாய்த் தீயாகி நீருமாகி,
இயமானனாய் எறியும் காற்றுமாகி,
அரு நிலைய திங்களாய் ஞாயிறாகி,
ஆகாசமாய் அட்ட மூர்த்தியாகி

என்று குறிப்பிடுகிறார்

அட்ட மூர்த்தியின் சிறப்பு இயல்பாக எண் குணம் உடையவனாக - சச்சிதானந்தமாக இருப்பது

> எட்டுக்கொ லாம்அவர் ஈறில்பெ ருங்குணம்
> எட்டுக்கொ லாம்அவர் சூடும் இனமலர்
> எட்டுக்கொ லாம்அவர் தோளிணை ஆவன
> எட்டுக்கொ லாம்திசை ஆக்கின தாமே!
>
> — திருநாவுக்கரசர் தேவாரம்

'கோளில் பொறியின் குணம் இலவே எண்
குணத்தான்
தாளை வணங்காத் தலை' (திருக்குறள்)

என்ற குறளால் அறியலாம்.

| | |
|---|---|
| தன்வயம் உடைமை<br>தூய உடம்பு உடைமை<br>பேராற்றல் உடைமை<br>இயல்பாகப் பாசமின்மை | சத்து ஆகிய தன்மை |
| இயற்கை உணர்வுடைமை<br>முற்றுணர்வுடைமை<br>பேரருள் உடைமை | சித்து இயல்புகள் |
| வரம்பில் இன்பமுடைமை | ஆனந்தம் |

என்பது இறைவனின் எண் குணம் ஆகும்.

எண் குணத்தானை ஆண்கள் வணங்கும் முறை அட்டாங்க வணக்கம் என்று கூறப்படும். அட்டாங்கம் என்பது தலை, கைகள், காதுகள், நெற்றி, கால்கள் ஆக எட்டு உறுப்புகளும் நிலத்தில் பொருந்துமாறு வணங்கு தலைக் குறிக்கும்.

கிருஷ்ணன் பிறப்பு கிருஷ்ணபட்சத்து அஷ்டமி திதியில் நிகழ்ந்தது. கிருஷ்ணபட்சத்து அஷ்டமி திருமணத்திற்குகந்த நாளாக எடுக்கப்படு கிறது. திருமணம் எட்டு வகைப்படும். அவையாவன:

1. பிரமம் 2. பிரசாபத்யம் 3. ஆரிடம் 4. தெய்வதம் 5. காந்தருவம் 6. ஆசுரம் 7. இராக்கதம் 8. பைசாசம்.

திக்குகள் எட்டாக் கிழக்கு, தென் கிழக்கு, தெற்கு, தென் மேற்கு, மேற்கு, வடமேற்கு, வடக்கு, வடகிழக்கு என்றும் அத்திக்குகளுக்குரிய பாலகர்களாக இந்திரன், அக்னி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் ஆகியோர் இருக்கின்றனர் அத்திக்குகளுக்குரிய எட்டு யானைகளாக ஐராவதம், தண்டரீகம், வாமனம், குமுதம், ஆஞ்சனம், புட்ப தந்தம், சாருவபூமம், சுப்பிரதீபம் ஆகியவைகள் இருக்கின்றன.

எடுத்த தேகம் ஞானம் எய்தி, வீடு பேறு ஆகிய முத்தியைப் பெறுவது வரை தீங்கின்றி நீடூழி வாழ்வதற்கான யோக சாதனங்களைக் கூறுவது அட்டாங்க யோகம் எனப்படும். அவையாவன இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பனவாகும். அட்டாங்க யோகத்தின் பயன் அளவிடற்கரியது. ஆன்மா சீவித்திருக்கும் நிலையிலேயே திருவடிப் பேற்றினைப் பெறுவதற்குரிய வாய்ப்புகளை அட்டாங்க யோகத்தினால் பெறலாம்.

அட்டமா சித்திகள் கை கூடின சித்தர்கள் பற்றி நாம் நிறைய அறிவோம். நம்மிடையே வாழ்ந்தும் இருக்கிறார்கள். அவையாவன அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் ஆகியவை.

அனலன், அனிலன், ஆபச்சைவன், சோமன், தரன், துருவன், ப்ரத்யூகன், பிராபசன் ஆகியோர் அட்டவசுக்கள்.

எண் எட்டின் மகிமையைப்பற்றி இன்னும் எவ்வளவோ கூறலாம்.

அட்ட இலக்குமியின் அருளால் அட்ட ஐஸ்வர்யமும் பெற்று வாழ்வோமாக!

* * *

# தட்சிணாமூர்த்தி திருவருட்பா- விரிவுரை

- பருத்தியூர் டாக்டர் K சந்தானராமன், M.A., D.Litt; Ph.D;

## 8. ஆனந்த அருள்மழை

மோகந் தரித்தவர்கள் மாதரைக் கூடியே
மோகந் தணிப்பர் அதுபோல்
முதுபசி தரித்தவர்கள் அன்னம் புசித்துலகில்
முதுபசி தணிப்பர் அதுபோல்
பாகந் தரித்தவர்கள் சற்குருவின் நோக்கப்
பயோததி படிந்தே பிர
பஞ்ச வெப்பம் தணிப்பார்கள் என்று
பலகலைகள் சொல்லவும் கேட்டு
ஆகந்தரித்த மலவடவையாற் சூடுண்டு என்
ஐயனே! நின் கடைக்கண்
ஆனந்த அருள்மழையில் மூழ்க வழிபாராமல்
அவமாக நாள் கழித்தேன்.
ஊகங் கொடுத்து அருளை அடையும்
வழி அருளுவாய்
ஓங்கு குருபர நாதனே!
ஒன்றாகி ஆனந்த உருவாகி என் உயிர்க்கு
உயிரான பரமசிவமே!

பசிகள் மூவகை. குழந்தை முதல் முதியவர் வரை அனைவருக்கும் உள்ளது வயிற்றுப்பசி.

வாலிபத்திலும், நடுத்தரவயதிலும், ஏன் சில ருக்கு முதுமையிலும்கூட ஏற்படுவது காமப்பசி அல்லது மோகப்பசி.

மிகச்சிலருக்கே ஏற்படுவது ஞானப்பசி அல்லது அருட்பசி. திருஞானசம்பந்தருக்கு அப்பசி மூன்று வயதில் ஏற்பட்டது. இப்பசி சிறிய அளவிலேனும் அனைவருக்கும் ஏற்படவேண்டும். அவ்வருட் பசியே உயர்வளித்து எக்காலத்திலும் உதவிடும். எனவேதான் வடலூர் வள்ளலார் உரைத்த மூன்ற னுள் 'பசித்திரு' என்பதும் ஒன்றாக அமைந்தது.

''அற்றார் அழிபசி'' என்கிறார் திருவள்ளுவர். அனைத்தையும் அழித்திடும் அப்பசி என்பது வள்ளு வர் கருத்து. ''பசித்திடப் பத்தும் பறந்து போம்'' என்பது பழமொழி.

பலநாட்கள் பசித்திருந்தவனுக்கு உணவு மட்டுமே உதவிடும். இங்கு, சுவாமிகள் அதனை 'முதுபசி' என்கிறார்.

பலநாட்கள் உணவின்றி இருந்தவர்கள் வாயி னால் உணவுபுசிக்கவும் இயலாத மயக்கநிலை அடையக்கூடும். அவர்களுக்குச் சோற்றை மயிர்க் கால்களின் வழியே உட்செலுத்தும் 'நவரக்கிழி' என்ற முறை இந்திய மருத்துவத்தில் உண்டு. தற்காலத்தில் ஊட்டச் சத்துகளை ஊசியின் வழியாகவும், குழாய் களின் வழியாகவும் உட்செலுத்தி தெம்பூட்டுகின்றனர்.

எப்படியானாலும் உணவின்மைக்கு உணவே தீர்வு.

''மோகத்தரித்தவர்கள் மாதரைக் கூடியே
மோகந்தணிப்பர் அதுபோல்
முதுபசி தரித்தவர்கள் அன்னம் புசித்துலகில்
முதுபசி தணிப்பர் அதுபோல்.''

சரி! மூன்றாவது பசியை எப்படித் தணிப்பது? யார் தணிப்பர்?

அந்தப்பசி நீங்க முதலில் சூடுதணிய வேண் டும். அதுதான் பிரபஞ்சவெப்பம் என்னும் உலகியல் ஆசாபாசத்தால் வந்த வெப்பம்.

அச்சூட்டைத்தாங்கியவர்கள், நல்ல குருநாதரை அணுகவேண்டும். அவர்கள் காட்டும் ஆன்மிகவழி அச்சூட்டைத் தணிக்கும்.

நல்ல குருநாதரின் அருட்பார்வை எப்படி இருக்கும் தெரியுமா? 'பயோததி' போல் இருக்கும்! அப்படி என்றால்? பயஸ் - பால்; பயோததி - பாற் கடல்!



''உடல் கூட்டுக்குப் பால் பருகுங்கள்'' என்று அனுபவசாலிகள் அறிவுரை கூறுவார்கள். பிரபஞ்ச வெப்பத்தைத் தணிக்க ஆழாக்குப் பால் போதுமா? பாற்கடலே வேண்டும்! அக்கடலும் உள்ளது! அதுதான் குருநாதரின் அல்லது சற்குரு நாதரின் (நல்ல குருநாதரின்) அருட்பார்வை.

இதனை ஞானநூல்கள் விளக்கியுரைத் துள்ளன. அதனைப் படித்திருந்தும், கேட்டிருந்தும் இறைவனின் அருள்மழையை நாடாமல் இருப்பது நன்றாகுமா?

வடவாமுகாக்னி அல்லது வடவைத்தீ என்பது கடலின் வடக்குப் புறத்தில் உள்ளதென்பர். இது ஊழித்தீ.

பகன் என்பவன் இயற்றிய தவக்கனலை அவனது முன்னோர்களின் வேண்டுகோளின்படி பெண்குதிரையின் வடிவாக்கி வடக்குக்கடலில் வைத்துள்ளான் என்பது புராண வரலாறு.

சூரியனைத் தேவர்கள் சாணை பிடித்தனர் என்றும் அப்போது சிதறிய சூரியனின் நெருப்புப் பொறிகளை விசுவகர்மா ஒன்றுசேர்த்து வடவைத்தீ ஆக உருவாக்கினான் என்றும் கூறுவர்.

மும்மலங்கள் என்ற வடவைத்தீ உயிர்களைச் சூடாக்கியுள்ளது. ஈசனின் அருள்மழை அதனைத் தணிக்கும்.

'பவதாவஸீதாவ்ருஷ்டி'' சம்சார வெப்பத்துக்கு அம்பிகை அமுதமழை போன்றவள்'' என்று இலலிதா சகஸ்ரநாமம் உரைக்கிறது.

இவற்றையெல்லாம் நூல்களின் வாயிலாகவும் சான்றோர்களின் வாயிலாகவும் படித்துக்கேட்டு அறிந்திருந்தும் பலர் அவமாக வீணே நாட்களைக் கழிக்கின்றனர்.

'ஊகம்' அல்லது 'யூகம்' என்பது புத்தியின் எண்வகை ஆற்றல்களில் ஒன்றாகும். ஒன்றைக் கொண்டு மற்றொன்றைப் புரிந்துகொள்வது யூகம். ''புகை உள்ளதால் அங்கே தீ உள்ளது'' எனத் தீர்மானிப்பது யூகம்.

ஈசனின் அருளை அடைய சான்றோர்களின் சொல்லிலிருந்து உண்மைப் பொருளை யூகித்து அறிந்து கொள்ளவேண்டும். 'யூகம்' என்ற ஆற்றல்களை யும் அவனே தருவான்.

''ஊகங்கொடுத்து அதனை அடையும் வழி அருளுவான்! ஓங்கு குருபரநாதனே!''

என்று தென்முகப்பரமனிடம் விண்ணப்பிக் கிறார் சிவஞான தேசிகர்.

நாராயண பட்டத்திரி என்பவருக்கு வாத நோய் வந்தது. குருவாயூர் பெருமானின் பக்தனான பூந்தானம் என்ற சான்றோரிடம் அதற்குப் பரிகாரம் கேட்டுவர ஒருவரை அனுப்பினார் பட்டத்திரி. அப்போது பொரித்த மீனைத்தின்று கொண்டிருந்த பூந்தானம் மீனைக் காட்டி ''இது முதல் எல்லாவற்றையும் சாப்பிடச் சொல்'' என்று கூறினார்.

பூந்தானம் மச்சாவதாரம் முதல் திருமாலின் திருவிளையாடல்களைப் பாடச்சொல்லியிருக் கிறார் என்பதை பட்டத்திரி யூகித்து அறிந்தார். இது தான் 'யூகம்'. ஆதிகுரு தட்சிணாமூர்த்தியும் ஊகத் தினைக் கொடுத்து அதன்வழியே அருள்மழையை அடையும் வழியை அருளுவான் என்பது சுவாமி களின் கருத்து.

❖❖❖

# ''பொருள் ஒன்று.... பெயர்கள் பல''

- பெருங்குளம் மணிமொழிச் செல்வன், M.A., B.Ed.

ஓம் என்பது ஓங்கார எழுத்து, ''உ'' ... என்பது ரச்சத எழுத்து ... அதனால் தான் உ என்பதை வைத்து ''உலகம் உவப்ப'' என்று நக்கீரர் பாடினார்.

'உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்' ... என்று ''உ''வை சிறப்பித்து சேக்கிழார் சுவாமி பாடினார்.

மகர மெய்யிலே உகரத்தின் உயிர் ஏறி வர 'முத்தை தரு' - என்று அருணகிரியார் பாடினார். தை என்பதை பிரிக்க த் + ஐ = தை; இதையே ''ஐ'' என்று ஐயா என்று பெரியோர்களை அழைகின்றோம்.

இயற்கை முழுவதிலும் அழகு உண்டு. சில இடங்களில் அமைந்துள்ள அழகு நம்முடைய உள்ளத்தை அப்படியே கொள்ளை கொண்டு போகிறது. உயர்ந்த எண்ணங்களை எண்ணுவதற்கு அழகிய இடங்கள் பெரிதும் பயன்படுகிறது. அத்தகைய உயர்ந்த எண்ணங்களை எண்ண மெய்ப்பொருள் ஒன்றைத் தேடி இந்த மாளிடம் செல்கிறது.

இறைவனை கையெடுத்து வணங்குகிறோம். கைகொண்டு ஆன வேலைகளை முடிக்க, இறைவன் நமக்கு துணை செய்யும் பொழுது அந்தக் கை இறைவனை துதிப்பதில் தவறு இல்லை.

கால்கள் திருக்கோவில்கள் செல்வதற்காகத் தான். கண்கள் இறைவனை நாம் காணத் தான். காதுகள் இறைவனின் திருமந்திரங்கள் கேட்கத் தான் படைத் தான். ஆதலால் தான் கை, கால், காது, கண்கள் ஆகியனவற்றை இரண்டாகக் கொடுத்த இறைவன் மனம் என்ற ''ஆன்மா''வை இறைவனை நினைக்கத் தான் படைத்தார் எனலாம்.

திருக்கைலாசகிரியில் பார்வதி சமேதராக பரம சிவன் வீற்றிருக்கிறார். பரிவாரங்கள் அனைத்தும் புடை சூழ்ந்துள்ளன. மனை வாழ்க்கையின் பொறுப்பு, பெருமை யாவும் அங்கு ஒன்று சேர்ந்துள்ளது. ஞானக் களஞ்சியமாக தந்தைக்கு அருகில் மூத்தவன் கணபதி. மூத்த கணபதிக்கு அனுசரணையாக ஆற்றலும், துடுக்கும் நிறைந்த இளையவன் வடிவேலன். அறிவும், ஆற்றலையும் ஒருங்கே பெற்ற சிவன் அறிய வல்லவராகிறார்.

பரமேசுவரன் எதிரே அவரது ஊர்தியாகிய காளையொன்று படுத்திருக்கிறது. இறைவரின் இடது பாகத்தில் அம்பிகை அமர்ந்துள்ளாள். பக்கத்தில் வாகனம் சிம்மம் உள்ளது. தந்தையின் அருகில் கணபதியும், அம்மையின் அருகில் வடிவேலனும் இடம் பெற்றுள்ளார்கள். மூத்தவன் முன்பு மூஷிகம் விளையாடுகிறது. உணவு பொருட்களில் உரிமை பாராட்டுகிறது. வடிவேலவனின் அருகில் மயில் குலாவுகிறது. தந்தையின் மேனியில் பாம்பு நெளிந்து உளர்கிறது.

மேலோட்டமாக இக் காட்சியை காணுபவர்களுக்கு அதிசயம் ஒன்றும் இல்லை. ஐதீகத்திற்குக் கட்டுப்பட்டு கரத்தால் கன்னத்தை அடித்துக் கொண்டு அரஹரா என்று சொல்லுவதோடு அவர்களின் பணி முடிகிறது.

சிந்திப்பவர்களுக்கு விநோதம் விளங்குகிறது. காளையும், காளையை கொன்று உண்ணக் கூடிய சிம்மமும் பக்கம் பக்கம் அமர்ந்திருக்கிறது. வருத்தப்படும் தன்மை காளையிடமும், வருத்தப் படுத்தும் தன்மை சிம்மத்திடமும் உள்ளது.

மூத்தவனுடைய வாகனம் எலி துள்ளி விளையாடுகிறது. இங்குமங்கும் சென்று கொண்டிருக்கிற எலி மீது பாம்பு பாய்ந்து விடலாம். ஆனால் பாம்பு பயமின்றி திரிய இடமில்லை. காரணம் மயில் குதித்து ஓடி வருகிற நிலையில் உள்ளது. இந்தச் சிற்றுயிர் களிடத்தே இத்தனை விதமான போராட்டங்கள். ஆக மொத்தத்தில் பிரச்சனை எல்லா இடத்திலும் இருந் தாலும் சுகமான சிந்தனை ஒன்றையுடைய பொருள் ஒன்றுதான்.

சிவனை விட சக்தியை நினைக்கையில் சிவனுக்கு ஒரு ராத்திரி, அது சிவராத்திரி, சக்திக்கு ஒன்பது ராத்திரி அது நவராத்திரி. ஆக சிவனும், சக்தியும் நம்மை ஒரு வழிபடுத்துகின்றன. பாலில் நெய் மறைந்திருப்பது போல பக்தியில் தான் இறைவனைக் காண முடியும்.

வழிபாட்டிற்குத் தேவை பூவும், நீரும் தானே.

''புண்ணியம் செய்வாருக்கு பூவுண்டு - நீருண்டு
அண்ணல் அதுகண்டு அருள் புரியா நிற்கும்''.

- என்பது திருமந்திரம்.

***

திருப்பாற்கடலில் பள்ளி கொண்டுள்ள பெருமான்தன்னுடைய இடது பாகத்தில் இலட்சுமியை வைத்துள்ளார். இலட்சுமி என்பது செல்வம்.

நம்முடைய இடதுபுறத்தில் தான் இருதயம் உள்ளது. மனம் குளிர ஆன்மா நன்கு அமைய நாமும் இடது புறத்தையே விரும்புகிறோம். அதனால் தான் தன்னுடைய குழந்தை செல்வம் உட்பட பத்திரமான எந்த பொருட்களையும் நம்முடைய இடதுபுறத் திலே அமையுமாறு அமைத்துக் கொள்கிறோம்.

ஆலயத்தினுள் செல்லும் பொழுது இடது புறமாகவே உள்ளே சென்று வலது புறமாக ஆலயத்தை விட்டு வெளியே வந்தாலும் திருக்கோவிலினுள் இருக்கும் தெய்வத்திற்கு வலது புறமாகவே வந்து செல்கிறோம்.

ஆன்மா சித்து விளையாட்டு பொருந்தியது. பச்சை மண்ணுடன சுட்ட மண் சேராது போல பக்தி உள்ளவர்கள் மற்றவர்களுடன் தொடர்பு கொள்ள விரும்பவும் மாட்டார்கள்.

பாவம் பசுவாக இருப்பதால் தானே பசுவை, ஆடுகளை, கோழிகளை மனிதன் சமைத்து உண்ண விரும்புகிறான். புலி, சிங்கத்தை மனிதனால் கண்டு வரமுடியுமா? மனிதனின் மனம் இல்லாததைக் கண்டு ஏங்குகிறது. இருப்பதைக் கொண்டு பெருமை கொள்ள இந்த மனம் விரும்பவில்லை. இயலவில்லை. ஆதலால் தான் ஆண்டவன் ஆமைக்கு மட்டும் யாரும் தாக்காத வண்ணம் ஓடு அமைத்தான். குதிரையின் குணம் அறிந்து கொம்பு வைக்க மறுத்து விட்டான்.

''அற்றால் அளவறிந் துண்க அஃதுடம்பு
பெற்றான் நெடிது உய்க்குமாறு''

- என்றார் வள்ளுவர்.

மனிதனின் நாக்குக்கு இறைவன் நரம்பு வைக்க வில்லை. நரம்பு வைத்திருந்தால் ஒரு நாளைக்கு ஓராயிரம் முறை சுளுக்கி கொள்ளுமே.

தட்பம், வெப்பம் சரியாக அமைதல் வேண்டும்
வெப்பம் மிகும் பொழுது மலர் வாடுகிறது.
தட்பம் மிகும்பொழுது மலர் அழுகி விடுகிறது.

**சிவன் பவள மேனியன்**

திருமால் பச்சைமா மலைபோன்ற மேனியன், பாதி சிவம்; பாதி விஷ்ணு இது தானே நாம் அறிந் திருக்கின்ற தத்துவக் கூறு. ஆதலால் தான்

சிவன் ஆலயத்தில் வெந்தநீர் திருநீர்
விஷ்ணு ஆலயத்தில் குளிர்ந்த தீர்த்தம், துளசி.

எல்லாம் வல்லமை கொண்ட பரம்பொருள் ஒன்று முக்காலங்களையும் நடத்தி செல்கிற சக்தி உள்ள ஒரே பொருள் ஒன்று தான். பெயர்கள் பலவாக உள்ளது.

நாம் கலந்து வைத்துள்ள தேனீரில் இருக்கிற சர்க்கரை நம் கண்களுக்கு எப்பொழுது தெரிகிறதோ அப்பொழுது தான் நாமும் அந்த பரம்பொருளை உணர முடியும். நாம் அள்ளிப் போடுகிற சர்க்கரையை நாமே காணாத பொழுது உலகத்தைக் காக்கும் கடவுளை அவ்வளவு எளிதாகக் காண முடியுமா?

சூரிய ஒளியிலிருந்து நேரிடையாக இவ் வளவு தொலை தூரத்தில் எரிக்கும் சக்தியை நாம் பெற வில்லை. ஆனால் சூரிய காந்த கண்ணாடியை ஒளியின் பிம்பம் கொண்டு பிடித்தால் நெருப்பு ஏற்படுகிறது. பக்தி என்னும் பரவசத்தின் மூலமே அந்த பரம்பொரு ளைக் காணலாம்.

மின் கம்பிகளிலே மின்சாரம் இருப்பினும் நம் கண்களுக்கு தெரிவதில்லை. அதன் மூலமாக மற் றொரு வடிவமாகத்தான் நாம் மின்சக்தியின் பயனைப் பெற முடியும். அதனால் தான் எங்கும் நிறைந்துள்ள ஒளிமயமான பரம்பொருளை நாம் திருக்கோவில் மூலமாகச் சென்று தரிசனம் செய்கிறோம்.

நாம் ஏற்றி வைக்கின்ற தீப ஒளிக்கு திசை ஏதும் உள்ளதா என்றால் கிடையாது. ஆதலால் தான் ''விளக்கு வழிபாடு'' வந்தது என எண்ணலாம்.

கொழுந்தாக மணம் தரும் மரிக்கொழுந்து,
மலர்ந்தும் மணம் தரும் மல்லிகை

மலர்ந்து காய்ந்த பின்னும் மணம்தரும் மனோ ரஞ்சிதம் போன்ற குணங்களை கொண்டவர் பரம் பொருள். ஒரு மனிதன் தான் ஒருவராக இருந்தாலும் தாய் தந்தைக்கு மகன் என்னும் உறவு. ஆசிரியருக்கு மாணவன் என்னும் உறவு. நட்புக்கு நண்பர் என்னும் உறவு என்று வகை வகையாக அமைவது போல,

பரம் பொருள் ஒன்றாக இருந்தாலும் பெயர்கள் பலவாறாக அமைகிறது என்பதை உணர்ந்து கொண்டு விட்டால் இவ்வுலகில் மதப்பூசலுக்கு இடமில்லை.

★★★

# இறைவா நீ வா!

- கவிஞர் சொ.பொ. சொக்கலிங்கம்



ஆக்கலும் அழித்தலும் ஆண்டவன் தொழிலே
ஆக்கலை மானுடர், அறிந்திலர் எனினும்,
ஊக்கமே இல்லா ஒருசிலர் மாந்தரைத்
தாக்கி அழிப்பதைத் தரணியும் ஏற்குமோ? 1

அறிவைக் கொடுத்த ஆண்டவன், நமது,
அறிவால் நம்மை அழிக்கவா கொடுத்தான்?
வெறியால் அறிவை விரயம் செய்வதால்
பறித்திடும் உயிர்களைப் பயங்கர வாதம், 2

அழித்திடும் செயலும், ஆண்டவன் செயலா?
பழிக்கு அஞ்சாப் பயங்கர வாதம்,
உழைக்கும் கரங்களால், உயிர்களைக் கொன்று
இழைத்திடும் கொடுமையை, இயற்கையும்
ஏற்குமோ? 3

இனங்களைப் படைத்த இறைவனா மதங்களைக்
கணக்கின்றிப் படைத்தான்? காரணம் மதமென,
இனங்களை அழிக்க இயங்கும் பயங்கரம்,
சுணக்கமே இன்றித் தொலைவது முக்கியம்; 4

அறிவால் பலபயன் அடைந்தும் உலகம்,
வெறியால் பலன்கள், வெறுமனே நொறுங்கும்,
வெறிகளின் செயலால், விஞ்ஞானம் அஞ்சும்
வெறிகளின் சதிகளை வென்றிட வேண்டுமே, 5

பழிக்குப் பழிஎனப் படலம் தொடங்குமுன்,
அழிப்பதைத் தொழிலென ஆக்கிய காரணம்,
விழிப்புடன் தெரிந்தே, வேண்டியதைச் செய்தல்,
செழித்திட அமைதி தேடுவோர் கடமை; 6

தன்னுயிர் கொடுக்கும் தற்கொலைப் படைகள்,
விண்வெளி சென்று, வெடித்த பயங்கரம்,
என்றுமே நடக்காதிருக்க வழிமுறை
கண்டு உயிர்களைக் காத்திட வேண்டுமே, 7

எல்லா மதமும், இறைவனே அன்பாய்,
எல்லா உயிரிலும், இறைவன் உறைவதை
எல்லா வேதமும், எடுத்துச் சொல்வதால்
கொல்வதை எம்மதம், கொள்கையாய் ஏற்றிடும்? 8

உயிரைப் பணயம் ஒன்றாய் வைத்தே,
உயிர்களைக் கொல்ல ஒளிந்தே வாழும்,
பயங்கர வாதம், பாரினில் ஒழிந்து
உயிர்கள் பிழைக்க ஒற்றுமை தேவையே; 9

கொல்வதே கொடுமை; கொல்வதை இறைவனின்
கொள்கையாய்க் கொள்வது கொடுமையில்
கொடுமை
கொல்வதை இறைவா, குலைத்திட நீவா,
கொல்லாமல் மாந்தரினம் கூடிவாழ மீண்டும்வா 10

* * *

# ஸ்ரீபதஞ்சலி முனிவரும் ஸ்ரீராமானுஜரும்

- திருமதி இந்திரா ஆரா அமுதன், திருவரங்கம்

ஸ்ரீ பதஞ்சலி முனிவரை வியாக்ரபாதர் என்றும் அழைப்பர். இவர் தில்லையில் உள்ள ஆயிரங்கால் மண்டபத்தில் குருபீடத்தில் அமர்ந்து ஒரே சமயத்தில் ஆயிரம் மாணவர்களுக்கு வியாகரண மஹா பாஷ்யத்தை போதித்த படி இருந்தார். எவ்வாறு போதித்தார் என்றால் ஒரு திரையின் பின்னே அமர்ந்தபடி. ஏன் என்றால், அவரை ஆதி சேஷனின் அவதாரம் என்று சொல்வதால், அவருடைய மூச்சுக்காற்று சிஷ்யர்களின் மேல் பட்டு அவர்களை இல்லாமல் ஆக்கி விடுமோ என்கிற பயத்தினால் திரையின் மறைவில் அமர்ந்து போதித்தார் என்பார்கள்.

ஸ்ரீராமானுஜரையும் ஆதிசேஷன் அவதாரம் என்று சொல்வார்கள். பதஞ்சலி முனிவரைப் போன்று இவரும் திரை மறைவில் அமர்ந்து செய்த விந்தையைப் பார்ப்போம்.

கிருமி கண்ட சோழனால் ராமானுஜர் திரு நாராயண புரத்தில் வசிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. ராமானுஜரைக் காப்பாற்றுவதற்காக அவருடைய உடையில் சென்ற கூரத்தாழ்வானும், பெரிய நம்பியும் தங்கள் கண்களை இழக்க காரணமானவன் இந்த கிருமிகண்ட சோழன். இவன் கிருமிகளால் தாக்கப்பட்டு இறந்த செய்தியைக் கேள்விப்பட்ட பின்னரே ராமானுஜர் திருநாராயணபுரத்திலிருந்து திருவரங்கம் திரும்பி வந்தார். முதலில் தொண்டனூரில் ராமானுஜர் வசித்து வந்தார். திருநாராயணபுரத்தை அரசாண்ட விட்டலதேவராயன் என்கிற மன்னன் சமணமதத்தைச்சேர்ந்தவன். அவனுடைய மகள் பிரம்மஹத்தி தோஷத்தினால் பீடிக்கப்பட்டிருந்தாள். சோழ நாட்டில் பிரம்மராக்ஷஸனை விரட்டிய மகிமையுடையவர் ராமானுஜர் என்று கேள்விப்பட்டவுடன், தன் மகளையும் குணப்படுத்தினால் தாம் வைஷ்ணவ மதத்திற்கு மாறித் தொண்டு புரிவதாக அரசன் ராமானுஜரிடம் வேண்டினான். ராமானுஜர் அரண்மனைக்குச் சென்று இளவரசியின் மீது ஆசார்யனின் தீர்த்தத்தைத் தெளித்தார். உடனேயே பெண்ணுக்கு உரிய நாணத்துடன் இளவரசி உள்ளே ஓடினார். சற்று நேரத்திற்கெல்லாம் புதிய ஆடை அணிகலன்களை அணிந்து கொண்டு ராமானுஜரை வணங்கினார். தன் மகளைக் குணப்படுத்திய அதிசயத்தைக் கண்ட மன்னன், உடனே தான் வைஷ்ணவத்திற்கு மாறுவதற்கு சம்மதித்தான். ராமானுஜர் அவனுக்கு பஞ்ச சம்ஸ்காரம் செய்வித்து, தாஸ்ய நாமமாக அவனுக்கு விஷ்ணு வர்த்தனன் என்கிற பெயரையும் சூட்டினார். அரசனும் வைஷ்ணவத்திற்கு நிறைய தொண்டுகள் செய்ய ஆரம்பித்ததைப் பொறுக்காத சமண குருமார்கள், தங்கள் மன்னன் மதம் மாறக் காரணமாக இருந்த ராமானுஜர் பேரில் கோபம் கொண்டு அவரை வாதத்திற்கு அழைத்தனர். அவர்கள் மொத்தம் 12,000 பேர்கள் இருப்பதாகவும், அவர்கள் ஒவ்வொருவருடனும் வாதம் புரிய வேண்டும் என்றும் சூளுரைத்தனர்.

அதற்கு உடையவர், ''நீங்கள் அத்தனை பேரும் ஒட்டு மொத்தமாக வாதம் செய்ய வாருங்கள்'' என்றார்.

''அத்தனை பேரையும் வெல்லும் ஆற்றல் உமக்கு இருக்கிறதா பார்ப்போம்'' என்று ஆணவத்துடன் கூறிச் சென்றனர்.

மறுநாள் ஒரு பெரிய மண்டபத்தில் ஒரு புறத்தில் தம்மை யாரும் பார்க்காதவாறு ஒரு திரையை அமைத்து ஸ்ரீராமானுஜர் அமர்ந்தார். 12,000 சமணர்களும் திரைக்கு முன்னால் ஆணவத்துடன் அமர்ந்து ஏக காலத்தில் கேள்விக் கணைகளைத் தொடுத்தனர். ராமானுஜர் ஆதிசேஷனின் அவதாரமாக இருந்ததால், ஆயிரக்கணக்கான சமணர்களின் கேள்விகளுக்கும் அக்கணமே பதிலளித்தார். இந்த அதிசயத்தைக் கண்ட சமணர்கள் தங்கள் தோல்வியை ஒப்புக் கொண்டனர். எண்ணற்றவர்கள் ஸ்ரீ வைஷ்ணவத்தில் சேர்ந்தனர். இந்த அதிசயத்தைக் கண்டு வியந்த விஷ்ணு வர்த்தனன் ராமானுஜருக்கு இன்னும் அதிக மரியாதைகள் தந்து தனது அரண்மனையிலேயே இருக்கச் சொன்னார். அவர் சில காலம் இருந்து விட்டு பின் யதுகிரி செல்ல ஆயத்தமானார். ஆக ஸ்ரீராமானுஜர் வாதம் செய்து வேற்று மதத்தவர்களை மதம் மாற்றுவதற்கு திரை மறைவில் இருந்து செயல் பட்டார். ஸ்ரீபதஞ்சலி முனிவரோ தன் சிஷ்யர்களுக்கு கெடுதல் வரக்கூடாது என்று நினைத்து திரையின் பின் இருந்து பாடல்களை போதித்தார். இது தான் வித்யாசமே தவிர இருவரும் ஆதிசேஷனின் அவதாரம் என்பதில் எள்ளளவும் சந்தேகம் இல்லை.

❖❖❖

# நம்மாழ்வாரின் சிந்தனைகள்

- V.N. கோபால தேசிகாசாரியார், M.A., M.Sc. London / RTS Retd.
ஒப்பிலியப்பன் கோயில்

வைணவசமயக்குரவர்கள் ஆழ்வார்கள் என்று அழைக்கப் பெறுகின்றனர். இறைவனின் திருக்கல் யாண குணங்களிலேயே இவர்கள் எப்போதும் ஆழ்ந்து இருந்ததால், இவர்களுக்கு ஆழ்வார் என்ற பெயர் ஏற்பட்டது. இறைவனான மஹாவிஷ்ணுவைப் போற்றி இவர்கள் தீந்தமிழில் பிரபந்தங்களை அருளிச் செய்தனர். அவை நாலாயிரத் திவ்யப்ரபந்தம் என்று வழங்கப் பெறும்.

ஆழ்வார் திருநகரி என்றே இப்போது அழைக்கப் படும் குருகூரில் அவதாரம் செய்த நம்மாழ்வார் ஆழ் வார்களுள் மிக முக்கியமானவராகக் கருதப்படுகிறார். வடமொழியில் உள்ள நான்கு வேதங்களைப் போல, அவற்றின் பொருளைத் திரட்டித் தமிழில் இவர் நான்கு ப்ரபந்தங்களை அருளிச் செய்ததால், ''வேதம் தமிழ் செய்த மாறன் சடகோபன்'' என்று அழைக்கப்படு கிறார்.

அவற்றுள் நம்மாழ்வார் அருளிச் செய்த திரு விருத்தம் என்னும் பிரபந்தம் ருக்வேத சாரமாகக் கருதப் படுகிறது. திருவாசிரியம் யஜுர்வேத சாரமாகவும், திருவாய்மொழி சாம வேத சாரமாகவும், பெரிய திருவந்தாதி அதர்வண வேதசாரமாகவும் போற்றப் படுகின்றன. இவற்றுள் பொதிந்து கிடக்கும் ஆழ்வா ருடைய சிந்தனைகளைச் சுருக்கமாகப் பார்ப்போம்.

ஆழ்வாருடைய முதல் பிரபந்தமான திரு விருத்தம், தமிழ் இலக்கியத்தில் அகத்துறை இலக் கணத்தைச் சேர்ந்தது. இதில் முதல் பாடலிலேயே, ''அறியாமை, தீய ஒழுக்கம், அழுக்கு உடல் இவற்றைக் கொண்ட நாங்கள் இளியும் இந்த உலக வாழ்க்கையில் அவதிப்பட்டு அல்லல் உறாமல், எங்களுக்கு வீடு பேறு அருள வேண்டும்'' என்று மக்கள் சார்பில், இறைவனிடம் வேண்டுகோள் விடுக்கிறார்.

''பெருமானே, எங்களைக் காப்பதற்காக நீ மீன், ஆமை, பன்றி, ராமன், கிருஷ்ணன் என்று பல அவதாரங்கள் எடுத்தாய். நாங்கள் பிறக்காமல் இருப்ப தற்காக நீ பிறக்கிறாய்.'' என்று அவன் சீலகுணத்தை எண்ணி வியக்கிறார்.

இயற்கைக் காட்சிகளைக் கண்டால் ஆழ்வா ருக்குப் பரந்தாமன் தான் நினைவுக்கு வருகின்றான். மேகங்களைப் பார்த்து ''பெருமானுடைய உடல் வண்ணமாகிய அழகிய நீல நிறத்தை நீங்களும் பெற் றிருக்கிறீர்களே! இதற்கு நீங்கள் என்ன பாக்கியம் செய்தீர்கள்? உயிர்களைக் காப்பதற்காக, நீரைச் சுமந்து கொண்டு, ஆகாயம் எங்கும் திரிந்து, உங்கள் உடல் வண்ணமாகிய அழகிய நீல நிறத்தை நீங்களும் பெற் றிருக்கிறீர்களே! இதற்கு நீங்கள் என்ன பாக்யம் செய்தீர்கள்? உயிர்களைக் காப்பதற்காக, நீரைச் சுமந்து கொண்டு, ஆகாயம் எங்கும் திரிந்து, உங்கள் உடல் நோவ நீங்கள் செய்த தவமோ, இறைவனுடைய நீலநிறத்தை நீங்களும் பெறக்காரணம்?'' என்கிறார்.

ஆன்மாவானது பலபல பிறப்புகளில் பலபல உடல்களை அடைந்து அவற்றினுள் உறைகின்றது. மாறி மாறி இப்படி அலைகின்ற ஆன்மாவுக்குத் தாயும் தந்தையும் திருமாலே. அவனைச் சரணம் புகுவதுதான் பிறவித்துயர் நீங்கி, வீடுபேறு பெறுவதற்கு ஒரே வழி.

திருமால்தான் பலபல சமயங்களை உண்டாக்கு கிறான். அந்த மதத்தினர் தொழும் தெய்வங்களை உண்டாக்குகிறான். அந்த தெய்வங்களை வணங்கும் முறைகள் பலவற்றையும் உண்டாக்குகிறான். ஆனால் அவை எல்லாவற்றிலும் பரந்தும், உட்புகுந்தும் நிற்கிறான் பரமன். ஒத்தாரும் மிக்காரும் இல்லாதவன் அவன்.

யஜுர்வேத சாரமான திருவாசிரியத்தில் திருமா லுடைய சொரூபம், திருமேனி, பண்புகள் முதலான வற்றை ஆழ்ந்து அனுபவிக்கிறார் நம்மாழ்வார். பசுமையான மரகதமலை போன்றவன் பெருமான். சிவந்த வானத்தில் தோன்றிய மேகம் போல், பீதாம்பர மான ஆடையை உடுத்தி இருக்கிறான். சூரியனைப் போல் ஒளி வீசுகின்ற கிரீடத்தை உடையவன். சந்திரன் போல் வெண்மையான முத்து மாலையையும்,



ஜொலிக்கும் நட்சத்திரங்கள் போன்ற நகைகளையும் அணிந்து, செம்பவள வாயனான திருமால், எல்லா தேவர்களும் தொழுது ஏத்தப் பாற்கடலில் பள்ளி கொள்கிறான். இங்கும் இயற்கைத் தோற்றங்கள் எல்லாம் ஆழ்வாருக்கு இறைவனைத் தான் நினை வூட்டுகின்றன.

ஊழிக்காலத்தில் எல்லா உலகங்களையும் எல்லாப் பிராணிகளையும் தன் வயிற்றில் வைத்துக் காத்துப் பிறகு அவற்றை முன் போலவே படைத்துக் காக்கும் அந்தக் கருணாமூர்த்தியே முழுமுதற் கடவுள் என்கிறார்.

பெரியதிருவந்தாதியிலும், கருணைக் கட லான பெருமானின் குணங்களையே பேசி, அவற்றி லேயே ஈடுபட்டு நிற்கிறார். நடுநடுவில் நமக்கு இன்னும் அவன் அருள் புரியவில்லையே என்று மனம் வருந்தி, இறைவனிடமே முறையிடுகிறார். ''நீ எனக்குக் கருணை காட்டாவிடினும், நான் உன் திருவடிகளை விட மாட்டேன்'' என்கிறார்.

மீண்டும் தன்னையே நொந்து கொள்கிறார். ''நெஞ்சே, பரமனின் அருளைப் பெற நமக்கு என்ன தகுதி உள்ளது? நீசனான நான் அவன் அருளைப் பெற ஆசைப்படுவது, பாம்பின் வாயில் கை நீட்டுவதைப் போல் சாகசச் செயல்'' என்று கூறுகின்றார். ''நாம் பொறுமையாக இருப்போம். எப்படியும் அவன் அருட் பார்வை நம்மேல் விழும்'' என்று மனம் ஆறி இருக்கிறார்.

ஆழ்வாரை இனியும் சோதிக்கக்கூடாது என்று திருமால் அவர் நெஞ்சில் புகுந்தான். மகிழ்ச்சிக் கூத்தாடு கிறார். ''திருமால் என் நெஞ்சில் புகுந்ததால், என் தீவினைகள் அகன்றன. திருக்கோயில்களில் நின்றும், இருந்தும், பள்ளி கொண்டும், நடந்தும் திருப்தி அடையாமல், என் நெஞ்சைத் தேடி வந்து அமர்ந்தான்'' என்று பெருமிதம் கொள்கிறார்.

தம் அனுபவங்களைக் கூறும் நம்மாழ்வார் மக்கள் எல்லோரும் உய்ய வேண்டும் என்ற கருணை யுடன் மக்களுக்கு அடிக்கடி உபதேசம் செய்கிறார் - நல்லறிவு பெற வாய்ப்பு உள்ளது. இறைவனைத் துதிக்க நா உள்ளது. அவனைத் தொழ உடல் உள்ளது. இவற்றை நல்வழியில் உபயோகப்படுத்த வேண்டாமா? பொழுதை வீணே போக்கினால், தீவினைகள் தான் வளரும் என்கிறார்.

ஆழ்வார் காலத்தில் தொலைக்காட்சி, கிரிக் கெட் முதலிய பொழுது போக்குச் சாதனங்கள் இல்லை அல்லவா! அவர் கேட்கிறார் - மக்கள் திருமாலைத் துதித்தும், அவனுடைய திவ்யசரிதங்களைக் கூறும் ராமாயணம், மஹாபாரதம் போன்ற புனித நூல்களைப் படித்தும், பொழுதை இனிதாகச் செலவிடாமல், பழுதே போக்குகின்றனரே. அவர்களுக்கு எப்படித்தான் பொழுது போகுமோ - என்று.

மறுபடியும் நொந்து கொள்கிறார் - யான் என்ன செய்வேன்? இந்த உலகத்தைத் திருத்துவது மிகவும் கடினம். பிரகலாதனிடம் விரோதம் கொண்ட இரணி யனை அழித்தான் பெருமான். அது போல, என்னுடைய விரோதிகளான என் தீவினைகளையும் அழிக்க மாட் டானா? ஆனால், அவன் என்னை மறந்தாலும் நான் அவனை மறக்க மாட்டேன்.

ஆழ்வாருடைய கற்பனை வளம் பல இடங் களிலும் பெருக்கெடுத்து ஓடுகின்றது. வானில் ஒளி வீசும் நட்சத்திரங்கள், அழகிய பூக்களை அள்ளித்

தெளித்தாற் போல உள்ளன. திருமால் திருவடியில் தேவர்கள் அன்புடன் பூசித்துத் தூவிய பூக்களோ இவை! உலகை அளந்து நெடிது உயர்ந்து நின்றானே திரிவிக்ரமன். அப்போது, ஆகாயம் ஒரு குடை, நட்சத் திரங்களின் குவியல்கள் அக்குடையின் ஜொலிக்கும் கம்பிகள், சந்திரன் குடைக் காம்பின் நுனியில் உள்ள வெள்ளிப் பூண், நெடுமால்தான் அக்குடையின் நீல மணி வண்ணமான காம்பு - என்று அழகாக உருவகப் படுத்துகிறார்.

திருமால் தன்னை ஆட்கொண்டு விட்டான் என்ற மதர்ப்பில் அவனிடமே வேடிக்கையாகக் கேட் கிறார் - பிரானே ஊழிக்காலத்தில் நீ எல்லா உலகங் களையும், எல்லாரையும், எல்லாவற்றையும் உன் திருவயிற்றில் வைத்துக் காத்தனை. ஆதலின் யாவரி லும் நீ பெரியவன். ஆனால், உன்னையே என் நெஞ்சிலே பிடித்துச் சிறை வைத்திருக்கிறேன். இப் போது சொல், நீ பெரியவனா, நான் பெரியவனா? - என்று.

ஆழ்வார் அருளிச் செய்த 1102 பாடல்களைக் கொண்ட திருவாய் மொழியோ தத்துவமும் சிந்தனை களும் சேர்ந்த ஒரு வண்ணக் களஞ்சியம். இதில் முதற் பதிகத்திலேயே இறைவனைப்பற்றிய தத்துவத்தைத் தெளிவாகக் கூறுகின்றார். எல்லையற்ற குண நலன் களை உடையவன். ஒப்பாரும் மிக்காரும் இல்லாத வன். காலத்தை வென்றவன். காலங்களாக நிற்பவன். யாவையுமாய் யாவருமாய் இரண்டறக் கலந்து நிற்பவன்.

எல்லாவற்றையும் கடந்து, பரந்து, அவற்றிலும் இரண்டறக் கலந்து நிற்பவன். அதே போல, எல்லா வற்றுக்குள்ளும், உடலின் உள்ளே ஆன்மா போல, மறைந்து இருப்பவன். பாலுக்குள் நெய் உள்ளது. ஆனால் நாம் அதைக் காண முடியாது. பாலைக் காய்ச்சி, தயிராகத் தோய்த்து, வெண்ணெய் எடுத்துக் காய்ச்சிய பின்னரே நெய் கிடைக்கும். இப்படி, உட லுக்குள் ஆன்மா போலவும், பாலுக்குள் நெய் போல வும், பெருமான் எல்லாவற்றிலும் உள்ளே ஆன்மா வாக நிற்கிறான். இதுதான் வைணவச் சமயத்தின் உயிர் நாடியான கொள்கை. எல்லாருடையவும், எல்லாக் காலங்களிலும், எல்லாவிதமான செயல்களுக்கும் திருமால்தான் ஆதிகாரணம்.

மக்கள் தமது அறிவுக் கெட்டிய படி பலபல தேவர்களைக் கடவுள் என்று வழிபடுவர். ஆனால் அந்த தேவர்களுக்குள்ளும் பரம்பொருள் ஆக நாராயணனே இருக்கிறான். மக்கள் அந்த தேவர்களிடம் வேண்டும் பலனைத் திருமாலே கொடுக்கிறான்.

இறைவனைப் பற்றிய தத்துவத்தை முதற் பதிகத்திலே கூறிவிட்டு, அடுத்த பதிகத்திலேயே, மக்களிடம் உள்ள கருணையால், அவர்களுக்கு உப தேசம் செய்கிறார். - 'நான்', 'என்னுடையது' என்று நினைக்கும் தீய எண்ணங்களை விடுங்கள். இந்த உடலும், உலக வாழ்க்கையும், ஒரு நொடியில் தோன்றி மறையும் மின்னலைப் போல நிலையற்றவை. இவற்றில் ஆசையையும் பற்றையும் விட்டு விட்டுத் திருமாலைச் சரணம் அடையுங்கள்.

அவன் தன் அடியார்களுக்கு எளியவன். அன் புடன் அவனைச் சரணடைந்தால், முதலையிட மிருந்து யானையைக் காத்தது போல, நம்மையும் நம் தீவினைகளிலிருந்து காப்பான். ஏனெனில் அவன் சீலகுணத்துக்கும் ஓர் எல்லையோ, வரையறையோ உண்டோ? கண்ணனாய்ப் பிறந்து அவன் செய்த மாயச் செயல்கள் சொல்லத்தரமோ? ஆதலால், என் நெஞ்சமே, நீ செய்ய வேண்டியது ஒன்றுதான். எந்த சமயத்திலும், எந்த நிலையிலும், திருமாலை விடாதே பற்றிக் கொள் - என்கிறார்.

ஆழ்வார் பலபல திருக்கோயில்களையும் அவற்றுள் உறையும் பெருமானையும் மனம் கசிந்து, நெஞ்சு உருகி, கண்ணீர் மல்க அனுபவித்து, புகழ்ந்து, போற்றிப் பாடுகின்றார். நரசிங்கன், ராமன், கிருஷ்ணன் முதலான அவதாரங்கள் எடுத்துப் பெருமான் செய்த வீர தீரச் செயல்களையும், அடியார்களுக்கு அவன் பல வகைகளிலும் அருள் புரிந்து அவர்களைக் காத்ததையும், தீந்தமிழில் இன்சுவைக்காவியமாக, வண்ணத் தமிழ்ப் பாட்டுக்களாக அருளிச் செய்கிறார். திருக்கோயில் களில் உறையும் திருமாலுக்கு எல்லாக் காலங்களி லும், எல்லா விதங்களிலும் அடிமை செய்ய வேண்டும். அதுதான் இவ்வாழ்க்கையின் மிக உயர்ந்த புனித மான குறிக்கோள் என்கிறார்.

திருமாலைச் சரணம் அடையும்படி மக்களுக்கு உபதேசித்த ஆழ்வார், அப்படிச் செய்யாதவர்கள் மீது வெறுப்பும் கோபமும் கொள்கிறார். 'கற்றதனால் ஆய பயன் என் கொல்வாலறிவன் நற்றாள் தொழாஅர் எனின்'' என்ற திருவள்ளுவர் கூற்றுப்படியே, ஆழ் வாரும் பெருமானிடம் அன்பு வைக்காதவர்கள் எத்தனை சாத்திரங்களைக் கற்றிருந்தாலும், எத்தனை ஜபதபங்களைச் செய்தாலும், அவையெல்லாம் வீணே, அவர்கள் வாழ்க்கையும் வீணே - என்கிறார்.

அடியார்கள் தன்னைச் சேவித்து, தனக்குத் தொண்டுகள் பல செய்து, நற்கதி அடைவதற்காகத் தான், அந்தக் கருணாமூர்த்தி திருக்கோயில்களில் அர்ச்சா வடிவமாக எழுந்தருளி இருக்கிறான். ஆனால், பரமனுக்குத் தொண்டு செய்வதைவிட, அவனுடைய அடியார்களுக்குத் தொண்டு செய்வதே மிக முக்கியம், மிகச் சிறந்தது என்று சாத்திரங்கள் கூறுவதை ஆழ்வார் விளக்கிக் காட்டுகிறார்.

கவிஞர்களுக்கும் ஆழ்வார் செய்யும் உபதேசம் ஒன்றுண்டு. அற்பப்பணத்துக்காகவும் புகழுக்காகவும் ஆசைப்பட்டு, மன்னர்களையும் மானிடர்களையும் கவி பாடாதீர்கள். அவர்கள் பற்றிப் பச்சைப் பசும் பொய்களைப் பேசிப் போற்றிப்பாடாதீர்கள். எம்பெருமானைக் கவி பாடி, உங்கள் வாயைப் புனிதம் ஆக்கிக் கொள்ளுங்கள் - என்கிறார்.

யாக்கை நிலையாமை பற்றியும் செல்வம் நிலையாமை பற்றியும் ஒருபதிகம் பாடுகின்றார் ஆழ்வார். நேற்று மன்னன் ஆக இருந்தவன், இன்று இன்னோர் அரசனால் வெல்லப்பட்டுக் கொடிய காட்டுக்குத் துரத்தப்பட்டு அல்லல் உறுகிறான். இதுவரை உலகாண்டு இறந்துபட்ட அரசர்களைக் கடற்கரையில் உள்ள மணல்களைப் போல் எண்ண இயலாது. மழை பெய்தால் உண்டாகும் எண்ணற்ற நீர்க்குமிழிகள் தோன்றி உடனே மறைவது போல, மக்களும் தோன்றி உடனே மடிகின்றனர். ஆதலால் இந்த வாழ்க்கை நிலையற்றது என்று அறிந்து கொண்டு நாராயணன் திருவடிகளைச் சரணடையுங்கள் - என்று மக்களுக்கு உபதேசிக்கிறார்.

ஆழ்வாருக்கு உண்ணும் சோறும் கண்ணன், பருகும் நீரும் கண்ணன், தின்னும் வெற்றிலையும் கண்ணன், எல்லாமே கண்ணன்தான். இப்படிப் பரமனிடம் ஆராத காதல் கொண்ட ஆழ்வார் எங்கும் திருமாலை; எதிலும் திருமாலைக் காண்கிறார்.

மண்ணைப் பார்த்தால், திரிவிக்ரமனாக உலகளந்தபோது, அவன் திருவடி பட்ட மண் என்கிறார். ஆகாயத்தைப் பார்த்தால், அவன் வசிக்கும் ஸ்ரீ வைகுண்டம் என்கிறார். கடலைப் பார்த்தால் அவன் பள்ளி கொள்ளும் கடல், சூரியன் அவன் சூரிய நாராயணனாக உறையும் இடம்; சந்திரனைப் பார்த்து அவன் போல் குளிர்ச்சியான பெருமான்; மலையையும் மழையையும் பார்த்தால் நெடுமால் - என்று இப்படி வாய் வெருவுகிறார். தீக்குள் விரலை வைத்தால் அவனைத் தீண்டும் இன்பம் தோன்றுகிறது என்கிறார்.

இளம் கன்றைத் தழுவி கோவிந்தன் மேய்த்தது என்றும், பாம்பின் பின் போய் அவன் படுக்கை இது என்றும், புல்லாங்குழல் ஓசை கேட்டால் மாதவன் என்றும் மயங்குகிறார் ஆழ்வார்.

துன்பமும் துயரமும் நிறைந்த இவ்வுலக வாழ்க்கையைக் கண்டு மனம் வெதும்புகிறார் இன்னொரு பதிகத்தில். ஒருவனுக்குத் துன்பம் வந்தால், அதைக் கண்டு மற்றவர்கள் இரக்கப்படாமல், மகிழ்ச்சி அடைகிறார்களே, ஐயோ, மக்கள் பிறப்பு, இறப்பு, வியாதிகள், கிழத்தனம் முதலியவற்றால் துன்புறுகிறார்கள். ஒருவன் இறந்தால், அவன் உறவினர்களும், சினேகிதர்களும் மேல் விழுந்து வருந்திக் கதறித் துடிக்கின்றனர்.

பலவழிகளாலும் மக்கள் பொருள் ஈட்டுகின்றனர். அந்தச் செல்வமே அவர்களுக்கு நெருப்புப் போலத் துன்பத்தை விளைவிக்கிறது. பல விரோதிகளை உண்டாக்குகிறது. இதெல்லாம் அறிந்தும், மக்கள் செல்வத்தைத் தேடி ஓடுகின்றனரே. அறத்தின் வழி நிற்காத கொடியவர்கள் பிறரை பயமுறுத்தித் துன்புறுத்திப் பணம் பறிக்கின்றனரே. இது என்ன உலகு இயற்கை என்கிறார்.

தம்முடைய புலன்கள் தம்மை நல்வழியில் செல்லாமல் தடுப்பதையும், தீவழியில் செலுத்த முயல்வதையும் கூறிக் கதறுகின்றார். ஒருவனுடைய விரோதிகள் வெளியில் இல்லை; அவன் உள்ளேயே இருக்கும் கண், செவி, வாய், மூக்கு, உடல் என்னும் ஐந்து புலன்கள் தாம் என்கிறார். இவற்றால் வரும் சிற்றின்பம் ஆரம்பத்தில் இனித்தாலும், பிறகு விஷம் ஆகி விடுகிறது. இப்படி மயக்கும் புலன்கள் தீவினைக் குழியில் தம்மைத்தள்ளி வதைக்காமல், தடுத்து ஆட்கொள்ள வேண்டும் என்று இறைவனை வேண்டுகிறார் ஆழ்வார்.

மேலும் உலக இயல்பை வருணிக்கிறார் - மனைவி, மக்கள், சுற்றத்தார்கள், நண்பர்கள் எல்லோரும் ஒருவனிடம் செல்வம் இருக்கும் வரைதான் அவனிடம் அட்டைகள் போல் ஒட்டிக் கொள்வார்கள். செல்வம் இல்லை என்றால் உடனே விலகிவிடுவார்கள். 'ஐயோ' என்று இரக்கம் கூடப் பட மாட்டார்கள்.

இப்படி நல்லுபதேசம் செய்யும் ஆழ்வாருடைய பிரபந்தங்கள் எல்லாவற்றிலும் அவர் உணர்த்துவதும், வலியுறுத்துவதும் இதுதான் - திருவான மஹாலக்ஷ்மியுடன் சேர்ந்த நாராயணன் தான் முழுமுதற் கடவுள். அவன்தான் பரப்ரம்மம், பரதத்துவம், பரமாத்மா, பரஞ்சோதி. அவன் எல்லாவற்றிலும் உள்ளேயும் வெளியேயும் பரந்து, வியாபித்து நிற்கிறான். எல்லாவற்றுக்கும் உள்ளே ஆன்மாவாக இருக்கிறான். ஒத்தாரும் மிக்காரும் இல்லாதவன். துன்பங்கள் நிறைந்த இந்த சம்சாரத்திலிருந்து விடுபட ஒரே வழி திருமாலை உள்ளம் உருகிச் சரணம் அடைதல் தான்.

★★★

# கோவிந்த நாமத்தின் பெருமை

- புலவர் ஏ. பரந்தாமன், எம்.ஏ., பி.எட்.

ஸ்ரீமந் நாராயணன் ''எள்ளுக்குள் எண்ணெய் போலும், கரந்த பாலில் நெய்யே போலும், உடலினுள் உயிரே போலும் எங்கும் மறைந்து வாழ்கின்றான். எங்கும் நிறைந்து உள்ளமையால் விஷ்ணு என்றும், எல்லா பொருள்களிலும் நிறைந்துள்ளமையால் நாராயணன் என்றும், திருமகளுக்குப் பதியாக திருமகளிடத்தில் பேரன்பு கொண்டு, தன் மார்பகத்து வாழ இடந்தந்தமையால் திருமால் என்றும் பெயர் பெற்று விளங்குகின்றான். திருமாலுக்கு ஆயிரத்தெட்டு திருநாமங்கள் இருந்த போதிலும் அவற்றுள் பன்னிரண்டு திருப்பெயர்களே மிகுந்த சிறப்பு வாய்ந்ததாக வேதங்கள் முதலாக இதிகாச புராணங்கள் கூறுகின்றன. அவையாவன :

| | | | |
|---|---|---|---|
| 1. | கேசவன் | 7. | திரிவிக்கிரமன் |
| 2. | நாராயணன் | 8. | வாமனன் |
| 3. | மாதவன் | 9. | ஸ்ரீதரன் |
| 4. | கோவிந்தன் | 10. | இருஷிகேசன் |
| 5. | விஷ்ணு | 11. | பத்மநாபன் |
| 6. | மதுசூதனன் | 12. | தாமோதரன் |

இப்பன்னிரண்டு திருப்பெயர்களுள் நான்காவதாக சொல்லப்படுகின்ற ''கோவிந்த'' நாமத்தின் சிறப்பினையும், அவை தரும் பலன்களையும் இங்கு காண்போம்.

கோக்களாகிய பசுக்களை மேய்த்துக் காத்தலாலும், கோபாலர்களாகிய ஆயர்பாடி மக்களைக் காத்தமையாலும், வருணன் பெய்வித்த கடு மழையினால் பல நாட்கள் துன்பப்பட்ட கோபர்களையும், கோக்களையும் கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்துக் காத்தமையாலும் கோவிந்தன் எனப்பெயர் பெற்றான். கோவிந்தன், கோபர்கள், கோக்கர்கள் மட்டுமன்றி, அனைத்து பக்தர்களுக்கும் அருள் புரிந்து வருகின்றான்.

கஜேந்திரன் என்ற யானை திருமால் வழிபாட்டுக்காக தினமும் ஓர் மடுவில் இறங்கி தாமரைப் பூவைப் பறித்துக் கொண்டு வந்து வழிப்பட்டு வந்தது. ஒரு நாள் கஜேந்திரன் தாமரைப் பூவைப் பறிக்கின்ற போது, அம்மடுவில் (சிற்றாறு) உள்ள ஒரு முதலை வந்து யானையின் கால்களைப் பற்றிக் கொண்டது. யானை எவ்வளவோ முயன்றும், முதலை யானையின் காலினை விடவில்லை. யானை மிகவும் வருந்தியது. தன் முயற்சியெல்லாம் தோல்வியடையவே, சர்வ வல்லவனான திருமாலையே சரணாகக் கருதியது. தனது துதிக்கையை மேலே தூக்கி ''ஆதிமூலமே'' என்று கதறியது. பக்தனான கஜேந்திரன் குரல் கேட்டு கருட வாகனத்தில் மண்ணுலகிற்குப் பறந்து வந்தான். யானையின் துயர் தீர்க்க சக்கரத்தை விடுத்து, முதலையின் கழுத்தை அறுத்து, யானையைக் காத்தான், இதனையே,

''மீனமர் பொய்கை நாண்மலர் கொய்வான்
வேட்கையினூடு சென்றிழிந்த
கானமர் வேழம் கையெடுத்தலறக்
கரா அதன் காலினைக் கதுவ
ஆனையின் துயரம் தீரப்புள் ளூர்ந்து
சென்ற நின்றாழி தொட்டானை''

என்றார் திருமங்கை ஆழ்வாரும்.

இப்படி யானையின் துயரத்தைத் தீர்த்தத்தைப் போல பல பக்தர்களின் துயரத்தை விரைந்து சென்று காத்திருக்கின்றார். அவர்களில் பாண்டவர்களின் மனைவி திரௌபதியும் ஒருவராவார். பாண்டவர்களிடம் வஞ்சனையாகச் சூதாடி நாட்டைப் பறித்துக் கொண்டதோடு, திரௌபதியையும் பந்தயத்தில் வெற்றிகண்டனர் கௌரவர்கள். அவளது மானத்தை அவள் கணவன்மார் முன்னிலையிலேயே போக்க முயன்றான் துச்சாதனன். தனது இரு கைகளையும் கூப்பி ''கோவிந்தா! கோவிந்தா! என்று அலறினாள். துவாரகையில் இருந்த கோவிந்தன் அங்கிருந்தே அருள் சார்ந்து, அவளது ஆடை சுரக்கும் படிச் செய்தான். திரௌபதியின் மானமும் காக்கப்பட்டது, இதனையே

''கோவிந்தா என்று குரல் கொடுத்தால் கூப்பிட்ட
நேரத்தில் காத்திடுவான்''
''கொடுமை கொண்டு அழுத திரௌபதிக்குத்
துகில் கொடுத்து இரட்சித்தாயே''

என்று பாடுகிறார் ஓர் திருமாலடியார்

''திரௌபதியைக் காத்தது கோவிந்த நாமமன்றோ?''

என்கின்றது முமுட்சுப்படி.

இப்படி கோவிந்தன் நமது கட்புலனுக்கு எட்டாத நிலையில் இருந்தாலும் அவனது ''கோவிந்த

நாமம்' நாம் கூப்பிட்ட நேரத்தில் உதவுகின்றது. இதனையே

"அவன் (கோவிந்தன்) தூரத்தனானாலும்
அது (கோவிந்த நாமம்) கிட்டி நின்று உதவும்''

என்று.

முமுட்சுப்படி கூறுகின்றது. இந்த கோவிந்த நாமத்தால் வைகுந்தம் அடைந்த ஒருவன் வரலாற்றை, திருமாலையில் தொண்டரடிப் பொடியாழ்வார் பாசுரம் கொண்டு காண்போம். ஓர் ஊரில் க்ஷத்ரியக் குலத்தில் பிறந்த ஒரு கொடியவன் இருந்தான். அவன் பண்ணாத பாபங்களெல்லாம் பண்ணினான், அதனால் அவனை நாட்டார் ''க்ஷத்திரிய பந்து'' என்று (கத்திர பந்து என்று மாறியது) ஊரைவிட்டு துரத்தி காட்டிற்கு அனுப்பி விட்டனர். காட்டில் சென்று, வெயில் பசி, தாகம் இவைகளால் துன்பப்பட்டு, காய், பழம், கிழங்கு இவைகளைத் தின்று சிலகாலம் வாழ்ந்து வந்தான். துயரத்தின் எல்லை அவனைச் சிந்திக்கத் தூண்டியது. தனது துயரத்திற்குக் காரணம் தான் செய்த பாபங்களே என்று உணர்ந்தான். பாபங்களைப் போக்கிக் கொண்டு நல்வழியடைய முயன்றான். காட்டில் தவமியற்றிக் கொண்டிருந்த முனிவரை நாடிச் சென்று, தன்னைப் பாபங்களிலிருந்து காப்பாற்றி நல்வழிப்படுத்த வேண்டினான். மனம் திருந்திய க்ஷத்திரிய பந்துவைக் காப்பாற்ற கருணை கொண்ட முனிவர் அவனுக்கு மூன்றெழுத்துடைய கோவிந்தா என்ற நாமத்தை உபதேசித்தார். கோவிந்தா என்பது வடமொழிச் சொல். இதில் உள்ள ''ந்'' என்ற மெய்யெழுத்தைக் கணக்கில் எடுத்துக் கொள்ளக் கூடாது. எனவே ''ந்'' நீக்க கோவிந்தா என மூன்றெழுத்து நாமமாயிற்று. இத்திருநாமத்தை உச்சரித்து வைகுந்தப்பதவி அடைந்தான். இவ்வளவு பெருமை யுடையது கோவிந்த நாமம். இதனையே.

"மொய்த்த வல்வினையுள் நின்று
மூன்றெழுத்துடைய பேரால்
கத்திர பந்து மன்றோ பராங்கதி
கண்டுகொண்டான்''

என்றார் தொண்டரடிப் பொடியாழ்வார். (திருமாலை)

இத்தகைய சிறப்பு வாய்ந்த ''கோவிந்த நாமத்தை'' எவராகிலும் கோவிந்தா! கோவிந்தா! என்றழைத்தால் அவனது பாபங்கள் தொலைந்து, பிறவி நீங்கி வைகுந்தம் அடைவான் என்ற உயர்ந்த நோக்கத்தில் தான் மக்கள் கோவிந்த நாமத்தைப் பயன்படுத்தி வந்தனர். ஒருவர் இறக்கும் போது கோவிந்தா என்று கூப்பிடுவதும், இறந்தபின் நாம் கோவிந்தா என்று சொல்லி பாடுவதும் இறந்தவன் மீண்டும் பிறப்படையாமல் வைகுந்தப் பதவியடைவது உறுதி என்பதைக் காட்டுவதேயன்றி, கேலிப்பெயர் அல்ல.



போனவன் மீண்டும் உயிருடன் திரும்ப மாட்டான் என்பதைக் குறிக்கும் ஓர் கேலிச் சொல்லாக மாறி விட்டது. கருத்து ஒன்றானாலும் நாம் பயன்படுத்துகின்ற முறையும், பொருளும் மாறுபடுகின்றது. எனவே நாம் கோவிந்த நாமத்தின் பொருள் உணர்ந்து உச்சரிப்போமாக.

இத்தகைய கோவிந்த நாமத்தை ஒருவன், பொருள் தெரியாமல் சொன்னாலும் இந்த கோவிந்த நாமம் அவனுக்கு நன்மை அளிப்பதிலிருந்து என்றும் தவறாது. எனவே அவனுக்கும் நன்மையே தரவல்லதாகும். இதனையே,

'பொருள் தெரியாது ஓதினாலும் தன் சுயரூபம்
கெட நில்லாது'' (முமுட்சுப்படி)

என்று கோவிந்த நாமத்தின் பெருமையை முமுட்சுப்படி கூறுகின்றது.

இதுவரை கூறியவற்றால் கோவிந்த நாமம், தன்னை எவராகிலும் பொருள் தெரிந்தோ, தெரியாமலோ உச்சரித்தாலும் அவருடைய பாபங்களைப் போக்கி வைகுந்தப் பதவியையும், பல நன்மைகளையும் அளிக்கும் என்பது புலனாகிறது. நாமும் கோவிந்த நாமத்தை தினமும் உச்சரித்து உய்வோமாக.

❖ ❖ ❖

# மாலே மணிவண்ணா!

- புலவர் ம. ரா. பக்தவச்சலம்

(குன்றத்தூர் திருவூரகப் பெருமானை மழை வேண்டிப் பாடியது)



1. மாலே! மணிவண்ணா! மாவினங்கள் நீராட
காலே நிலைக்கொள்ளா நீர்கண்வாய் – மேலேயும்
பாய்ந்தோடச் செய்தருள்வீர்! பைநாகப் பாயுடையாய்!
ஆய்ந்தொடியார் பூசைக்கு மாங்கு.

2. வான்மழை வாராதோ? வையம் குளிராதோ?
தேன்மழைச் சிந்திடும் தொங்கலைப் – பூண்டவரே!
அன்று அடர்மழை ஆட்கொண்ட அண்ணலே!
இன்று தொடர்மழைத் தா.

3. கார்மேகம் சூழ்ந்தும்; கடுமழைத்தான் காணோமோ?
பார்முகம்நீர் பாசிப் படராதோ? – கார்வண்ணா!
கோவர்தம் கைக்கொண்ட கோவிந்தா! நீரின்றி
கோவர்க்கம் யார்காப்பார் கூறு?

4. கூறிடத்தான் ஒல்லுமோ நீர்க்கொடுமை? கூட்டமாக
மாறிடத்தான் கொள்ளுமோ மாற்றுமன்? – சொற்புள்ளும்
கூட்டாய் பறந்தனவே! கோகிலமும் ஒய்ந்தனவே!
கோட்டுப்பூ காய்ந்தனவே காண்.

5. கன்னின்ற கார்மேகம் கண்ணீர் கசியாமல்
விண்ணின்று மெல்ல விலகினவே – எண்ணற்ற
நீர்நிலை வற்றினவே! நீலவண்ணா! பாற்கடலில்
நீரின்றி வாழ்வீரோ நீர்?

6. நீரின்றி வேறுண்டோ நீலவண்ணா? நல்லுயிர்க்குப்
பாரின்றி வேறுண்டோ பார்ப்பதற்கு? – பாரிலே
ஊரகம் வேறுண்டோ உற்றார்க்கு? ஊற்றுநீர்
ஊரகத்தே வேறுண்டோ ஊன்று.

7. ஊட்டிச் சுருங்கினவே! ஊழல் பெருகினவே!
கோட்டிக் குடங்கொள; கோதிலா – மெட்டி
எதிரொலிக்க நின்செவி கேட்டிலையோ? கண்ணா
அதிர் மழைச் செய்வீ ரடர்ந்து.

8. ஊரகத்தான் உள்ளளவும் ஊனமில்லை! ஊராரின்
பேரகத்தே நின்ற பெருமாளே! – கார்மேகம்
கல்மழையைக் கொட்டாதோ? கன்வாய் நிறையாதோ?
தொல்லுகில் தோன்றாதோ தெம்பு?

9. சக்கரமும் சங்கும் சரிந்தனவோ? சாரங்கா
அக்கரமம் எங்கும் அலைமோத! – தேக்கநீர்
வற்றினவே எம்மருங்கும்! வேளாண்மை வேண்டியே
பற்றினோம் பாதம் பணிந்து

10. கொறுக்கை முறிந்தன! கோகயம் கெட்டு
உறுத்தை மெலிந்தன; உற்கை உறுமிற்று;
ஏறுக்கை யொழிந்து முறுக்கை முதிர்ந்து
அறுக்கை அழிந்தது வாண்டு

11. ஊழி முழுமுதலே! ஊரவர் போற்றிடும்
ஆழி மழைக்கண்ணா! ஆரமுதே! நாழிநேரம்
நல்ல மழையருள்வீர்! நானிலத்தே நல்லோர்நின்
வல்லமை எண்ண வகுத்து.

12. திருவிருந்த வல்லித் திருமகளே! ஏற்றும்
திருவிளக்கே! யல்லால் இருளில் – உருவம்
புலப்படுமோ? நீரின்றி ஐம்புலங்கள் மண்ணில்
நலப்படுமோ? தாயே நயந்து.

13. ஆண்டாள் அருஞ்சொல்லே ஆட்கொண்டேன்! ஆருயிர்
மாண்புற்ற வாழ்விற்கே! மாபழி – வேண்டற்க!
நல்ல மழையருள்வீர்! நானிலத்தே நல்லோர்நின்
வல்லமை எண்ண வகுத்து.

# மகரிஷி தாயுமான சுவாமிகளும் மகாத்மா காந்தியடிகளும்

- திருமதி ஜி. கமலா, எம்.ஏ.,எம்.பில்.

மனிதன் மாக்களிடத்து பகுத்தறிவால் வேறுபட்டவன். இவ்வேறுபாட்டால் சுற்றுப்புறச்சூழலையும் தன்னைப்பற்றியும் ஆய்வு செய்யமுற்பட்டான். தான் யார்? தன்னிலையென்ன? என்று ஆய்ந்த ஆய்வே அவனை சமயஉணர்வுக்கு அடிகோலி ஆக்கப் பணிக்கு உந்தித்தள்ளின. சமயவுணர்வாவது உலகத்தோடு தன்னை இணைத்துக்கொள்ளும் உள்ளுணர்வு யென்று 'ஹேவ்லாக் எல்லிங்' என்னும் அறிஞர் குறிப்பிடுவார்.

சமயம் என்பது மனிதனுடைய ஆன்மாவைப் பக்குவப்படுத்தும் நெறிமுறைகள்: கடவுள் இருப்பில் கொள்ளப்படும் அசைக்கமுடியாத நம்பிக்கையான கொள்கை. இந்தியர்களாகிய நமது சமயம் இந்து சமயம்; இந்துசமயம் சனாதன தர்மத்தை வலியுறுத்துவது. சனாதனதர்மம் உலகளாவியது. உலகளாவிய உண்மையை அகமுகமாக ஆய்வுசெய்து கண்டுணர்ந்தவர்களே மகரிஷி தாயுமான சுவாமிகளும் மகாத்மா காந்தியடிகளுமாவர். இவ்விருவரும் பல சமயங்களை ஆய்ந்து அதில் சமத்துவத்தையும் ஒருமை இறைமையையும் உணர்ந்து தெளிந்தவர்கள். ஆன்மிகநெறியிலே ஆழ்ந்து சென்று உண்மையை அனுபவித்தவர்கள். இறையுணர்வு பெற்றதோடு இறைமையை உலக முழுவதிலுமுள்ள உயிர்களிடத்தும் கண்டு, அனைத்து உயிர்களிடத்தும் குடிகொண்டுள்ள சத்துப்பொருள் இறைமையின் சிறுதிரளேயென உணர்ந்தவர்கள். ஆன்மீகத்தில் மனிதநேயத்தைப் புகுத்தி இறைத்தொண்டான திருத்தொண்டையும் மக்கள் தொண்டையும் ஒருங்கே செய்த பெருமையையுடையவர்கள். ஆன்மீகப் பாதையில் நாட்டு மக்களை நடத்திச் சென்றவர்கள். இவ்விரு பெருந்தகையோரின் ஆன்மவளர்ச்சியையும் மனிதநேயத்தையும் தகுந்த நூல்கள் கொண்டு ஒப்புநோக்குவதே இக்கட்டுரையின் முக்கிய அம்சமாகும்.

முதற்கண் மகரிஷி தாயுமான சுவாமிகளுக்கு ஆன்மீகமும் மனிதநேயமும் வளர்ந்த சூழ்நிலையை திரு அ.லெ. நடராசன் ''கஸ்தூரி காந்தி கன்னியா குருகுல வெளியீட்டில் வந்துள்ள 'ஸ்ரீதாயுமானவர் வழ்வும் வாக்கும்' என்ற நூலை வைத்து நோக்குமிடத்து அவர்காலத்து அரசியலில் ஏற்பட்ட குழப்பங்கள், இளமையிலேயே மனைவியின் இழப்போடு சிறுகைக் குழந்தையோடு தனிமையானது நாட்டு ராணி மீனாட்சியம்மையாரின் காமத்தாக்கத்தால் ஏற்படுத்திய வன்முறைகள், அந்நாட்டு அதிகாரிகளின் துஷ்பிரயோகங்கள் முதலியன தாயுமானவரை முற்றும் துறந்தநிலையில் ஆன்மிகப்பற்றுக்கு அடிகோலி மிக ஆழத்துள் செல்லவித்திட்டது.

இத்துடன்தாயுமானவர் மிகவும் இரக்கசுபாவம் உள்ளவர். ஒரு சமயம் அரசன் சொக்கநாத நாயக்கர் கொடுத்த விலையுயர்ந்த சால்வையை, வழியில் குளிரால் நடுங்கிக்கொண்டிருந்த ஹரிஜன ஏழை மூதாட்டிக்கு வழங்கியதிலிருந்து அவரது உள்ளம் அன்பின் வழியது என்றும், அவர் மனிதநேயம் உடையவர் என்பதும் புலனாகிறது.

மகரிஷி தாயுமானவரைப் போலவே மகாத்மா காந்தியடிகளுக்கு, டால்ஸ்டாயின் நூல்கள், மாரிட்ஸ்பர்க் அவமரியாதை, ஜொகன்னஸ்பர்க் அவமரியாதை, அரிச்சந்திரன் மற்றும் சிரவணன் வரலாறுகள், இவையெல்லாம் மனிதநேயத்தை அதிகரித்ததோடு நசுக்கப்பட்ட ஒடுக்கப்பட்ட ஏழைஎளிய மக்களுக்காகத் தொண்டாற்ற, விடுதலை சமுதாய ஆன்மீகப் போராட்ட துவக்கம் திருப்புமுனையாக அமைந்தன. மாரிட்ஸ்பர்க் அவமரியாதை உலகெங்கு வியாபித்து நின்ற பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் அடித்தளத்தை அசைப்பித்தன. இவை யாவும் வெங்கடேஸ்வரலுவின் தமிழாக்கமான மகாத்மாகாந்தியின் சுயசரியதை நூல்கொண்டு ஆயப்பட்டது.

அடுத்து இவ்விருவரின் ஆன்மீகமும் மனிதநேயமும் எவ்வாறு ஒன்றுபட்டது என்று ஒப்புநோக்கப்பட்டது. மகரிஷி தாயுமான சுவாமிகளும் காந்தியடிகளும் உருவவழிபாட்டை ஆமோதிக்கின்றார்கள். ''எந்த சமயமாயினும் சரி, ஏதேனும் ஒரு சின்னம் வழிபாட்டிற்கு அவசியம்: (பாமர மக்கள்) கல்லிலும் செம்பிலும் வடிக்கப்பட்ட சிலைகளில் ஆண்டவனுக்கும் தமக்கும் ஒரு தொடர்புவேண்டுமென்று வழிபடுகிறார்கள்'' என்று 13.3.1937 நாளில்

வெளிவந்த ஹரிஜன் பத்திரிக்கையில் கூறியிருக்கிறார் மகாத்மாகாந்தியடிகள். இதனை வலியுறுத்தி தாயுமான சுவாமிகளும் கோயில்களுக்குச் செல்வது, புனித தீர்த்தங்களில் நீராடுவது, புண்ணியதலயாத்திரை செல்வது போன்றவைகளை முறையாகத் தொடங்கினால் இறையுணர்வு மேலிட்டு ஆன்மீகநெறிக்கு வழிகோலும்: தக்க ஆச்சாரியார் அமைவார் என்று குறிப்பிட்டுள்ளார் (பராபரக்கண்ணி 156 பாடல்)

இவ்வாறு இவர்கள் இருவரும் சிலைகளின் வழியே கடவுளை வணங்கி இறைவுணர்வை வளர்த்து சத்தியப்பொருளை நாடிச்சென்றனர். சத்தியம் என்ற சொல் 'சத்' என்ற சொல்லிலிருந்து உருவாகியுள்ளது. 'சத்' என்ற சொல்லிற்கு இருக்கிறது என்று பொருள். உலகிலுள்ள அனைத்துப் பொருட்களிலும் சத்தியம் இருக்கிறது. வேறுவிதமாகச் சொன்னால் உலகிலுள்ள அனைத்திலும் பிரம்மம் பொதிந்துள்ளது எனக்கூறலாம். அதனால்தான் காந்தியடிகளின் ''சத்தியமே கடவுள்'' என்ற கூற்று பொருந்தி வருகிறது. இந்த முழு சத்தியத்தையே அகத்தே கண்டனர் மகரிஷி தாயுமான சுவாமிகளும் மகாத்மா காந்தியடிகளும். மேலும் இவர்கள் இறைமையை தன்னுள் வைத்ததோடு இறைவனை எங்கும் பார்த்தனர் என்பது, 'சத்தாகி நின்றோர் சடங்கள் இலிங்கமென வைத்தாரும் உண்டோ என் வாழ்வே பராபரமே' என்ற பாடல் ஒப்பு நோக்கத்தக்கது.

மேலும் காந்தியடிகள் கீழ்மட்ட சமுதாய மக்கள் உள்ளத்திலேயே இறைமையைக் கண்டுணர்ந்தவராதலால் அவர்கள் அனைவரும் கடவுளின் குழந்தைகளென்று பொருள்பட 'ஹரிஜன்' என அழைக்கலானார். அத்துடன் தனக்காகவும் இறைவனுக்காகவும் அல்லாமல் மக்களோடு கலந்து அவர்கள் துன்பங்களைத் தானும் பகிர்ந்துகொண்டார். இக்கருத்தை ஒப்பு நோக்கும் பட்சத்தில் தாயுமான சுவாமிகளும்.

'எவ்வுயிரும் தன்னுயிர்போல் எண்ணும்
தபோதனர்கள்
செவ்வறிவை நாடிமிகச் சிந்தைவெப்ப தெந்நாளோ?'
என்று பாடியுள்ளார்.

இவ்வாறு இவர்கள் பின்பற்றிய சத்தியவழி அகிம்சைக்கு இட்டுச் செல்லும். அகிம்சையின் அடிப்படை அன்பு. அன்புகொண்டவர்களின் கூட்டமைப்பே சர்வோதய சமுதாயம். இச்சமுதாயத்தில் மனம், வாக்கு, செயல் இம்மூன்றிலும் அகிம்சையைக் கடைப்பிடிக்கவேண்டுமென்று காந்திஜி கூறியுள்ளார். சர்வோதயமாவது அனைவரின் நலம் நாடுதலாகும். இக்கருத்தை வலியுறுத்தும் வகையில் அருளையர், தம்பாடலில் தன்னுயிர்போல தரணியில் மருவிய மன்னுயிர் அனைத்தையும் வளர்த்திடும் வேந்தனாக' தாயுமானவர் திகழ்ந்ததாகக் குறிப்பிட்டுள்ளார்.

சர்வோதய சமுதாயத்தில் சமத்துவம் அடிப்படையானது. சாதிசமய வேறுபாடுகளைச் சர்வோதயம் ஏற்றுக்கொள்வதில்லை. காந்தியடிகளின் சர்வோதயத்தில் சமுதாயத்தில் உற்பத்திகாரணிகள் எல்லாம் சமுதாய உடைமைகளாய் இருப்பதே சர்வோதய சமுதாயவுடைமை. கடவுளால் படைக்கப்பட்ட உடமைகள் அனைவருக்கும் பகிர்ந்தளிக்கப்பட வேண்டும் என்ற பொதுவுடைமையையே சர்வோதயம் வலியுறுத்துகிறது. இக்கருத்தைத் தாயுமான சுவாமிகள் 'எல்லாம் உன் அடிமையே: எல்லாம் உன் உடமையே' என்ற வரிகளில் தெளிவாக்குகிறார். 'உள்ளதே போதும்' என்ற திருப்தி வரவேண்டும் என்று தாயுமான சுவாமிகள் கூறும் கூற்றை காந்தியடிகள், தேவைக்கு அதிகமானவற்றைத் தானம் செய்யவேண்டும் என்று வலியுறுத்தி அறக்கட்டளை நிறுவி அதற்கான விதிமுறைகளையும் வகுத்துச் சாதித்தார்.

சர்வோதயத்தை மேன்மைப்படுத்திய இருவரும் சமுதாய சமத்துவத்தையும் வலியுறுத்தினர். சமுதாய சமநோக்கினை இருவரும் வலியுறுத்தினாலும் தனிமனிதனின் வாழ்க்கைத்தரமும் உயர வேண்டும் என்றனர். வாழ்க்கைத் தரத்தைச் சீரழிக்க வல்ல தீயபழக்க வழக்கங்களான மது, மாது, சூது இவைகளைப் போக்க காந்தியடிகள் அரும்பாடு பட்டார். தாயுமான சுவாமிகள் தம் பாடல்களில் பஞ்சமாபாதகங்களைக் குறிப்பிட்டு உள்ளார், கொலை, களவு, கள், காமம், கோபம் இவைகளை விட்டால் இறையருள் மலையிலக்காய் கிடைக்கும் என்று தம் பாடலில் குறிப்பிட்டுள்ளார். (பராபரக்கண்ணி - 288)

நிறைவாக, உயிர்பெற்ற ஒவ்வொரு மனிதனும் ஒரு செயலை மேற்கொண்டாக வேண்டும். இவற்றுள் நரசேவை நாராயண சேவை: சீவ சேவையே சிவசேவையென்று சுவாமி விவேகானந்தர் குறிக்கும்பட்சத்தில் இறைவன் உள்ளத்தில் உயிரோடு பிணைந்திருக்கிறார். உயிரில் விரவியுள்ளது இறைமை. இறைமை உள்ளத்தில் வழிய தியாகவுணர்வுடன் பிறவுயிர்கள் உய்யச் செய்வது தொண்டுநெறி. இந்நெறியை அனைவரும் பின்பற்றவேண்டுமென்று 'சாந்தி சேனை' நிறுவினார் காந்தியடிகள். இறைமையை உயிர்கள் மாட்டு காணும் அன்பர்களுக்குப்பணிசெய்தால் இன்பநிலைதானே வந்தடையும் என்பர் தாயுமானவர். காந்தியடிகளைப் போல் தாயுமானவர் அரசியலில் நேரடியாக செயல்படாவிடினும் பல அடியார்களை உருவாக்கி நல்வழிக்கு இட்டுச்

# நூல் நயம்

நூற்பெயர் : குரு அர்ச்சனை பூக்கள்

நூலாசிரியர் : திருமதி வசந்தாதுரைராஜன்

வெளியீடு : திருமதி தனலட்சுமி
20/3, இரண்டாவது தெரு,
காமாட்சிபுரம், மேற்கு மாம்பலம்,
சென்னை - 600 033.

விலை : ரூ. 36; பக்கங்கள் 84.

திருவண்ணாமலையில் மெய்யன்பர்கள் வண்டென மொய்க்க விற்றிருந்து திருவருள் பாலித்த பகவான் யோகி ராம்சுரத்குமார் மீது 108 கவிமலர்களால் பாடப்பட்ட ''அர்ச்சனைப் பூக்கள்'' இந் நூல்.

''நடமாடும் சொர்க்கம் ஒன்று
அண்ணாமலையில் கண்டேன்''

''பார்வையின் கதிர்கள் நம்மைத் தீண்ட
பாவங்கள் விலகிடும் விந்தை கண்டேன்''

- குருவின் திருவருள் போற்றும் பாக்கள்.
பாடிப் பரவசம் கொள்ளலாம்.

செல்ல உபதேசம் மூலம் தனது ஆற்றலை வழங்கி ஆன்மவாதிகளை உருவாக்கும் பணி மேற்கொண்டது மனிதநேயம் கொண்ட சமுதாய நன்னோக்குடையது என்பது உணரத்தக்கது.

எனவே மக்கள்தொண்டு அன்பின் பெருக்கால் தான் செய்யமுடியும். அன்பு உள்ளம் உருகி வெளிப் படும். இறைபக்தியில் உருகும் உள்ளம் அன்புள்ள மாய் திரியும். உள்ளத்திலேயே அன்பு வழிந்தால் தான் அகிம்சை வழியில் செல்லமுடியும். தற்போது இறைமையை மூலமாகக்கொண்ட அன்புநெறிகள் நாட்டில் குறைய ஆரம்பிக்கின்றன. காரணம் மனித னது பேராசையே. மனிதனது தேவைக்கு போது மானது உள்ளது. பேராசைக்கு வேண்டியது இல்லை என்று காந்தியடிகள் கூறும் கூற்றை 'ஆசைக்கோர் அளவில்லை'. உள்ளதே போதும் என்ற நிறைவு வேண்டும் என்று தாயுமானவரும் ஆமோதிக்கிறார்.

நிறைவாக நாட்டின் அமைதி அகிம்சை அடிப் படையில்தான் இயங்கமுடியும். பாரத மண்ணில் பலநாட்டு மன்னர்களும் அதிபர்களும் கால் எடுத்து வைத்ததுமன்றி அரசாண்டும் உள்ளார்கள். அதனால் நாட்டில் பல சமயங்களும் பல கலாச்சாரங்களும் புகுந்ததோடு நன்குவளர்ச்சிபெயுற்றும் விட்டன. மனிதன் தான்வாழும் இடத்திற்கும் சூழ்நிலைக்கும் ஏற்ப சமுதாய சமத்துவத்தைக் கடைபிடிக்க வேண்டும். ஒவ்வொரு மனிதனும் தன் மரபுவழி அல்லது தான் விரும்பும் சமயத்தைப் பின்பற்றுவது அவனது சொந்த வுரிமை. ஆனால் தன் தனி வழிபாட்டை சமுதாயத்தில் பலாத்காரமாக திணிக்க முயற்சிக்கக் கூடாது. மற்றைய சமுதாயத்தினரின் வழிபாட்டிற்கும் நம்பிக்கைக்கும் மரியாதை கொடுக்கக் கற்றுக்கொண் டால் ஒருவருக்கொருவரிடையே நேயம் வளர்ந்து ஒற்றுமைஉண்டாகி மனிதநேயம் உருவாகும். சமயங் களில் சமரசம் காண ஆன்மீகப் பயிற்சி அவசியம். சமரசம் கண்டால் சமத்துவம் ஓங்கும். சமத்துவம் ஓங்கினால் மனிதநேயம் வளரும். மனிதநேயத்தால் நாடும், நாடுகள் சூழ்ந்த உலகமும் ஒன்றுபடும்.

மேலும் வன்முறை மறைந்து மனிதநேயம் மலர, மதநேயமும் மலர உலகில் அணுஆயுதத்தை விட வலிமை வாய்ந்தது அன்பு. அன்பிற்கு இன-சமய பேதமில்லை. அன்பே கடவுள். கடவுள்தான் சத்தியம். ஆனால் அகஆய்வில் சத்தியப்பொருளை யுணர்ந்து அனுபவித்தவர்களுக்கு அச்சத்தியமே கடவு ளாகிறது. அன்பினால் பிறரின் குற்றம் பெரிதாகத் தெரியாது. தான் சிந்திப்பதையே பிறரும் சிந்திக்க வேண்டும் என நினைப்பது சுயநலம். பிறருடைய சிந்தனைக்கும் முக்கியத்துவம் கொடுக்கும் பான்மை ஒருமைப்பாட்டை உருவாக்கும். ஒருமைப்பாடு விட்டு கொடுப்பதால் உண்டாகிறது. விட்டுக்கொடுக்கும் மனப்பாங்கு, உள்ளத்தில் கனிவும் அன்பும் நிரம்பி யிருந்தால்தான் வரும்.

எனவே உலகம் ஒன்றுபட்டு அமைதி வழி யாக வாழ காந்தியடிகள் மற்றும் மகரிஷி தாயுமான சுவாமிகள் காட்டிய மனிதநேயத்தோடு கூடிய ஆன் மீகப்பாதையில் செல்வதே சாலச்சிறந்தது என்பது இக்கட்டுரையில் உண்மைப் பயனாகும்.



திருவேற்காடு அருள்மிகு தேவி கருமாரியம்மன் ஆலயத் திருத்தேரோட்ட விழாவை இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை கூடுதல் ஆணையாளர் திருமிகு எஸ். கனகய்யா பி.ஏ.பிஎல். அவர்கள் தொடக்கி வைத்தார்கள். திருக்கோயில் இணை ஆணையாளர் / நிர்வாக அதிகாரி திரு எம்.கே. பாலசுப்பிரமணியம் பி.ஏ.பிஎல். அவர்கள் உடன் உள்ளார்கள்.

பதிவு எண். T.N/CHIEF PMG/515/2001/WPP 283





பழநி அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயிலுக்கு மாண்புமிகு தமிழக முதல்வர் திருமிகு ஓ. பன்னீர்செல்வம் அவர்களும், மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர் திருமிகு பி.சி. ராமசாமி அவர்களும் வருகை தந்து சிறப்பித்தார்கள். தமிழக அரசின் அறநிலையத்துறைச் செயலாளர் திருமிகு பி.ஓ. ராமையா இ.ஆ.ப. அவர்களும், இந்து சமய அறநிலையத்துறை சிறப்பு ஆணையாளர் மற்றும் ஆணையாளர் திருமிகு த.ரா. சீனிவாசன் இ.ஆ.ப. அவர்களும், திருக்கோயில் இணை ஆணையர் / நிர்வாக அதிகாரி திரு கே.கே. இராஜா அவர்களும் உடன் உள்ளார்கள்.

வெளியிடுபவர் : ஆணையர், தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை, சென்னை – 600 034.
ஆசிரியர் : கவிஞர் டாக்டர் த. அமிர்தலிங்கம், எம்.ஏ.பி.எச்.டி.,
அச்சிட்டோர் : **பாவை பிரிண்டர்ஸ் (பி) லிட்.,** 142, ஜானி ஜான் கான் தெரு, சென்னை – 600 014.